Regd. No. 2975.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் விசேஷ மலர்

## பராபவ பங்குனி விசாகம்

ஆசிரியர்:— ஸ்ரீகாஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்



பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்.

# Sri Ramanujan Special Issue

PUBLISHED ON THE EVE
OF THE
## 77TH BIRTH DAY
OF
## Sri P. B. Annangaracharyaswamy
OF KANCHEEPURAM.

29-3-1967.

ஸ்ரீ:

## இந்த விசேஷமலரில் அடியேன் வெளியிட விரும்பிய விசேஷங்கள் மூன்று.

1. அதீத ஸம்வத்ஸர ஜன்மநக்ஷத்ரத்திலிருந்து வர்த்தமாந ஸம்வத்ஸர ஜன்மநக்ஷத்ரம் வரையில் ஸம்ஸ்க்ருதத்திலும், தமிழிலும், தெலுங்கிலும் எழுதி வெளியிட்ட வியாஸங்களும் நூல்களும் இன்னின்னவை யென்பது. 2. இந்த ஒரு வருஷத்திற்குள் வெளியிட்ட பூர்வாசார்ய க்ரந்தங்களும், புநர்முத்ரணம் செய்வித்த ஸ்வகீய க்ரந்தங்களும் இன்னின்னவை யென்பது. 3. ஸ்வஸ்தான பரஸ்தானங்களில் செய்த உபந்யாஸங்களின் விவரணம். ஆக இம்மூன்றே. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடு-ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலை—முதல் ஸம்புடம் 800 பக்கங்கள் கொண்டது. இரண்டாவது ஸம்புடம் அச்சாகி வருகிறது. நாலாயிர திவ்யப்பிரபந்தம்—மூன்ருவதுபதிப்பு. [ஸ்வகீய க்ரந்தங்களின் மறுபதிப்புகள் ] நாச்சியார்திருமொழி முதல் கண்ணி நுண்சிறுத்தாம்பு வரையில் திவ்யார்த்த தீபிகையுரை. (ஐந்தாவது பதிப்பு.) திருவாய்மொழியில் 6, 7 பத்துக்களுக்கு திவ்யார்த்த தீபிகையுரை. (நான்காவது பதிப்பு.) கத்யத்ரய ஸுந்தரபாஹுஸ்தவ ஸ்ரீகுணரத்நகோச வியாக்கியானங்கள். (மூன்ருவது பதிப்பு) ஸுதர்சநசதக வியாக்கியானம் (மூன்ருவது பதிப்பு) இன்னும் முடிவுபெறவில்லை. . . . . [ஸ்வகீய ஸம்ஸ்க்ருத க்ரந்தங்கள்,] திருவாய்மொழிக்கு ஐந்தாவதுபத்தில் *கடல்ஞாலம் முதல் பூர்த்தியாகவும், ஆரும்பத்து பூர்த்தியாகவும். கீதார்த்த ஸர்வஸ்வம்—நூறு சுலோகங்கள் (வியாக்கியானமும்) கொண்டது கீதையின் விசேஷார்த்தங்களெல்லாம் பொறிக்கப்பெற்றது. 108 திவ்ய தெசங்களுக்குத் தனித் தனி ச்லோக மாலை. (டிப்பணியுடன்.)

தெலுங்கு பாஷையில்—முதல் இரண்டு திருவந்தாதிகளுக்கு டீகை.
ஸ்வகீய க்ருதியான கீதார்த்த ஸர்வஸ்வத்திற்கு தெலுங்கு டீகை.

### — தமிழிலெழுதி வெளியிட்ட வியாஸங்களும் நூல்களும் —

மும்மூர்த்திகளுக்கு மேலான மூலசக்தி விமர்சம்
கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகா விசேஷம்
பதின்மர் திருப்பள்ளியெழுச்சியாராய்ச்சி
திருப்பாவை யாழ்வார்களின் நிர்ணயம்
ஸ்ரீரங்கநாத பாதுகாப்ரேக்ஷணம்
குரௌவாதிஹம்ஸாம்புதாசார்யவுரை
ப்ரபலஸந்தேஹ விஜ்ஞாபனம்
மார்கழி ஸுதர்சந மாஹாத்மியம்
ஸுதர்சன ப்ரபாவ நவரத்னமாலை
ஸ்ரீரங்கதேவஸ்தான வ்யவஹாரஸாரம்
நம்மாழ்வார் தேவப்பெருமாளுத்ஸவம்
ஸ்ரீராமாநுஜ சம்பூக்ரந்த விமர்சம்
போகத்தில் வழுவாத புதுவையர்கோன்
கஜேந்திரமோக்ஷ மஹோத்ஸவச்சிறப்பு
ஆளவந்தாரும் எம்பெருமானரும்
திருமலைப் பெரியஜீயர் ஸ்வாமி மஹிமை
ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் பதினெட்டு
ஸ்ரீராமாயணத்தில் பதினெட்டு
பகவத் விஷயத்தில் பதினெட்டு
திருமந்திரார்த்தப் பதினெட்டு
த்வயார்த்தப் பதினெட்டு
சரமச்லோகார்த்தப் பதினெட்டு
தத்வத்ரயத்தில் பதினெட்டு
ஸ்ரீவசனபூஷணத்தில் பதினெட்டு
ஆசார்யஹ்ருதயப் பதினெட்டு
யதீந்த்ரரும் யதீந்த்ரப்ரவணரும்
பூருவாசாரியர்களின் ஐகமத்யம்
நிகமாந்தகுரு ஸூக்திரஸங்கள் 18
நாராயணனருளால் நாம்பெற்ற பேறுகள்
ஸத்காலக்ஷேப ஸபை விருந்து
மார்கழிநீராட்டத்தின் மருமம்
அரையர் ஸேவையின் அடைவு

ஆக வியாஸங்கள் 32

ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்த ரக்ஷை (இரண்டு பரிச்சேதம்)
ஸாத்யஸாதநபக்தி சோதனம்
பஞ்சஸப்ததி பரமார்த்த ரத்னம் (ஸசேஷம்)
எழுபத்தைந்து வினவிடைகள்
விலக்ஷணஜகதுபகாரம்
வித்யாபரிச்ரமபரீக்ஷா
திருவத்யயநோத்ஸவ வைபவதீபிகை
அருளிச்செயலுவமை யெழுபத்தாறு

ஆக நூல்கள் 8

ஸ்ரீரஸ்து.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீராமாநுஜன் - விசேஷ மலர்

பராபவ வத்ஸர – பங்குனி விசாக மலர்.

## ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யதாஸன் அன்பர்கள் ஸன்னிதியில் அஞ்சலித்து விஜ்ஞாபிப்பது.

அன்புநிறைந்த ஆரியர்களே! ஸ்ரீராமாநுஜன் 220 லக்கமுள்ள ஸஞ்சிகையைச் சென்ற திங்களில் பெற்று வாசித்திருக்கிறீர்கள். அது ப்லவங்க வருஷத்துச் சித்திரைமாதப் பத்திரிகையென்று தெரிந்துகொண்டிருக்கிறீர்கள். அதற்கடுத்தபடி 221 லக்கமுள்ள ஸஞ்சிகை (வைகாசிமாதத்திற்காக) வெளிவர வேண்டும். அதனை இப்போது நிறுத்தி இப்பத்திரிகை விசேஷ மலராக வெளியிடப்படுகின்றது. சென்ற (220) இதழில் "அடியேனுடைய ஸொந்த விஜ்ஞாபனங்கள்" என்ற மகுடத்தின்கீழ் அடியேன் சுருக்கமாக (இரண்டே பக்கம்) விஜ்ஞாபித்திருப்பதை இதற்கு முன்னுரையாகக் கொள்ளலாம். ஆழ்வார்கள் கோஷ்டியில் ஆதியிலுள்ள பொய்கையாழ்வாரும் அந்தத்திலுள்ள திருமங்கையாழ்வாரும் ஒரு விஷயத்தை ஒரே விதமாகச் சொல்லியிருக்கிறார்களென்பதை அந்த விஜ்ஞாபனத்தில் எடுத்துக்காட்டினேன். (அதாவது) *பழுதே பலபகலும் போயினவென்றஞ்சியழுதேன்* என்றார் பொய்கையாழ்வார்; *ஊமனார் கண்டகனவிலும் பழுதாயொழிந்தன கழிந்த வந்நாள்கள்* என்றார் திருமங்கையாழ்வார்—என்று காட்டி, இவ்விரண்டு பாசுரங்களும் நமக்காக வன்றென்று கொள்பவனடியேன்—என்று விஜ்ஞாபித்திருப்பதை நினைவூட்டுகிறேன். அதன் தொடர்ச்சியாகப் பல விஷயங்களை விஜ்ஞாபிக்கத் தொடங்குகிறேனிப்போது. தானே எழுதிய தன்சரிதையின் தொடர்ச்சி இது என்றுங் கொள்ளலாம்.



இப்போது நடப்பது க்ரோதி வருடத்தின் மூன்ருவதான வருடம். முந்தின
க்ரோதியின் பங்குனித்திங்களில் திருநாட்டுக்கெழுந்தருளினவர் அடியேனுடைய
திருத்தகப்பனுர். எனவே அறுபத்திரண்டு வருடங்கள் கடந்தனவென்கை.
அடியேனுடைய வாழ்க்கையில் கனவில்லாத நாட்களே பெரும்பாலும் கிடையாது.
காணும் கனவுகளில், என்றைக்கோ மறைந்துபோன உறவினர்களையும் நண்பர்
களையும் உதாஸீனர்களையும் கண்டுவருகிறேன். திருத்தகப்பனுர்மட்டும் ஒரு
நாளைக்கனவிலும் காட்சி தந்தருள்வதில்லையே என்கிற மனக்குறை பெரிதுமுடை
யவனு யிருந்தேன். சில மாதங்களுக்குமுன்பு ஒருநாள் ஆச்சரியமாகக் கனவில்
ஸேவை ஸாதித்தார். கனவில் காட்சிதருமவர்கள் நெடுநாளைக்குமுன் பரம
பதித்தவர்களா யிருந்தாலுங்கூட அவர்களை ஜீவித்திருப்பவர்களாகவே நினைத்து
வார்த்தையாடுவது தானே கனவின் போக்கு. திருத்தகப்பனுர் (கனவில்) முதன்
முதலாக ஸேவை ஸாதித்தபோது "அப்பா! நீர் பரமபதித்ததாகவே நினைத்து
அழுதுகொண்டிருக்கிறேமே; இத்தனைநாளாக நீர் எங்கே போயிருந்தீர்? எங்
கிருந்து வந்தீர்? எப்போது வந்தீர்? இனிமேல் எங்கும் போகாமலிருப்பீரா?"
என்று ஏதேதோ கேட்கிறேன். நான் எங்கும் போகவில்லையேடா? எதற்
காக அழுதுகொண்டிருக்கிறீர்கள்?" என்கிருர் தகப்பனுர். 'அப்பா! நீர் பொய்
சொல்லுகிறீர்; நீர் பரமபதம்போய்ப் பலவருஷங்களாய்விட்டதே, எப்படி
வந்தீர் சொல்லும்' என்கிறேன். இவ்வளவே கனவு. அந்த நாலைந்து நிமிஷங்
களில் அடியேனடைந்த ஆனந்தத்தை என்னசொல்லுவேன். அறுபதாண்டு
கட்குப் பிறகு திருத்தகப்பனுர் நமக்குக் கிடைத்துவிட்டாரே! என்றே அப்போது
நினைத்து உள்ளம்பொங்குகிறேன். இதற்குப்பிறகு அடிக்கடி கனவில் ஸேவை
ஸாதித்துவருகிருர். அறுபத்தொன்றரை வருஷம் அடியோடு ஸேவை ஸாதிக்
காத குறைதீர இப்போது அடிக்கடி ஸேவை தந்தருளுகிருர்போலும் என்றெண்
ணிக் களித்து வருகிறேன்.

இடையில் ஒரு நாளைய கனவிலிருந்து நினைவுக்குவந்தவொரு விஷயத்தை
வெளியிடுகிறேன். என்னுடைய ஏழாவது பிராயத்துச்செய்தி. அறுபத்தொன்
பது வருடங்களுக்கு முற்பட்டசெய்தி. (இது கனவன்று, நனவு.) பெரியாழ்வார்
திருமொழி மூன்ரும்பத்து *தன்னேராயிரம் பிள்ளைகளோடு * தொடங்கி ஸந்தை
ஸாதிக்கிருர் திருத்தகப்பனுர். அந்தப்பதிகத்தில் நாலாம் பாட்டில் * பொய்யா
வுன்னைப் புறம் பலபேசுவ புத்தகத்துக்குள கேட்டேன் * என்றுவருகிறது.
கண்ணன் செய்யும் பொறுக்கொணுத் தீம்புகளைச் சொல்லிவருகிற யசோதை
"பொய்யே வடிவெடுத்தபையா! உன்னைப்பற்றி அவரவர்கள் சொல்லுகிற பழி
மொழிகளை யெழுதினல் ஒரு ஏடு இரண்டேடு அல்ல; ஒருபெரிய புத்தகமாகு
மப்பா" என்கிருளிதில். அப்போது அடியேன் ஓயாமல் செய்கிற தீம்புகளும்
அதற்காகத் தந்தையாரிடம் பெறுகிற கொடிய கடிய தண்டனைகளும் நினைவுக்கு
வரும்போதெல்லாம் இற்றைக்கும் கர்ப்பம் கலங்குகிறது. நான் மறந்தவற்றையும்
மறவாமல் சிந்தையில் வைத்துக்கொண்டு நித்யப்ரவசனம் பண்ணுவதற்குத்
தமக்கை யொருத்தியிருக்கின்ருள். இதுநிற்க. மேலே குறித்த தன்னேராயிரப்
பதிகம் ஸந்தையாரம்பிப்பதற்குச் சில நாழிகை முன்னே கனத்த தீம்புகள் செய்து

ப்ரஹாரங்கள் பெற்றிருந்தேன். அழுதுகொண்டே ஸந்தைசொல்லி வருகிறேன். மேலே காட்டின *பொய்யாவுன்னைப் புறம்பல பேசுவ புத்தகத்துக்குள கேட்டேன்* என்கிற பாதம் சொல்லும்போது பக்கத்திலிருக்கும் பிதாமஹியிடம் தகப்பனுர் ஸாதிக்கிருர்—கண்ணன் செய்த தீம்புகளுக்கு ஒரு புத்தகம் போதும்; இப்பயல் செய்கிற தீம்புகளுக்கு ஒன்றிரண்டு போதுமா? ஒன்பதினுயிரம் புத்தகம் வேண்டும் –என்று. இஃது இன்று நேற்று செவிப்பட்ட சொல்போலிருக்கின்றதே யொழிய அறுபத்தொன்பதாண்டுகட்கு முன்பு கேட்டதாக இல்லை. இச்செய்தி நினைவுக்கு வரும்படியான கனவு ப்ராப்தமான மறுநாள் தேவப் பெருமாளுக்குப் பஞ்சபர் வோத்ஸவமொன்று. அன்று * தன்னேராயிரம் பிள்ளைகளோடு பதிகமே இயல் ஸேவிக்க ஆப்தமாயிற்று. (இதுவொரு ஆச்சரியமடியேனுக்கு.) அப்போது கோஷ்டியில் *பொய்யாவுன்னையென்கிறபாதம் ஸேவிக்கையில் என் பக்கத்தி லெழுந்தருளாநின்ற ஸ்ரீஉவே. திருமலை ஈச்சம்பாடி வரதாசாரியர் ஸ்வாமியிடம் அடியேன் சொல்லுகிறேன்–“இது பெரியாழ்வார் திருவாக்காலுலும் யசோதையின் வாக்காக அவதரித்துள்ளது; கண்ணனுடைய சிசுப்பிராயத்தில் சொல்லுகிற வார்த்தையிது; அப்போது கண்ணனைப்பற்றி ஒரு புத்தகமும் அவதரிக்கவில்லையே” என்று இவ்வளவே சொன்னேன். யசோதை சொன்னது பழுதுபடாமைக்காகவே கண்ணனைப்பற்றிப் பலபுத்தகங்கள் தோன்றிவிட்டன; அதேபோல, திருத் தகப்ப னுருடைய சொல் பழுதுபடாமே அடியேனைப் பற்றியும் அடியேனுலும் பல புத்தகங் கள் தோன்றிவிட்டன–தோன்றிக்கொண்டுமிருக்கின்றன.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் (6–3.) திருவிண்ணகர்ப்பதிகத்தில் *பூவில்வாழ்மகளாய்த் தெளவையாய்ப் புகழாய்ப் பழியாய்* என்றருளிச் செய்தபடி



புகழோடு பழியோடு வாசியற இரண்டும் பகவத்விபூதியே யாதலால் இரண்டையும் ஸமமாக வரவேற்பவனடியேன். அடியேனைப் பற்றி வெளிவந்தவை கிடக்க; அடியேனுல் வெளிவந்தவை சிறிதும் பெரிதுமாகக் கணக்கிட்டால் இன்றளவும் எண்ணூறுநூல் தேறுகின்றன. நேற்று கார்த்திகை மாதத்தில் பெரியகாஞ்சீபுரம் சுக்லயஜுர் வேத பாடசாலையில் மூன்று நாள் யாஜ்ஞவல்க்யஜயந்தி நடத்தினுர்கள். முடிவு நாளில் அடியேனை உபந்யஸிக்க வரவழைத்தார்கள். உபந்யாஸாவஸானத்தில் ஜயந்தீ ப்ரவர்த்தகரான ப்ரஹ்மஸ்ரீ. பதரீநாராயணசாஸ்த்ரிகள் பல வார்த்தைகளிடையே சொல்லுகிருர்—“சிலபண்டிதர் கள் பிறர்செய்த நூல்களைத் தங்கள் பெயரால் வெளி யிட்டுக் கொள்ளுகிருர்கள்; இந்த ஸ்வாமி தாம் செய்யும் நூல்களையும் பிறர் பெயரால் வெளியிடுகிருர்” என்ருர். இதை இவர் எப்படியறிந்தாரென்று ஆச்சரியமாகவே யிருந்தது. இதிலிருந்து நினைவுக்கு வந்த மற்ெருரு பழைய செய்தியையும் ப்ரஸங்காத் விஜ்ஞாபிக்கிறேன், ஸ்ரீமத் பரமஹம்ஸ. அயோத்யா ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி

யென்பவர் ஸ்ரீரங்கநாராயணஜீயர் மடாதிபதியாக இருந்தகாலத்திலும், அந்த ஸ்தானத்தை விட்டு விலகி ஸ்ரீபெரும்பூதூரிலெழுந்தருளியிருந்த காலத்திலும் ஸ்ரீரங்கத்திலிருந்தும் திருக்குடந்தை முதலானவிடங்களிலிருந்தும் சிலர் (இதர ஸம்ப்ரதாயஸ்தர்கள்) சில விவாதச்சுவடிகளை வெளியிட்டுக்கொண்டிருந்தார்கள்; அக்காலத்தில் அவற்றுக்கு (மேலே ப்ரஸ்தாவித்த) அயோத்யா. ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி சில மறுப்புகளையும் அடியேன் சில மறுப்புகளையும் வெளியிட நேர்ந்தது. அந்த ஸ்வாமியும் ஸொந்தப்பெயரால் வெளியிடுவதில்லை; அடியேனும் அப்படியே, * விவாதச் ச விவாஹச் ச ஸமயோரேவ சோபதே * ஆதலால் அதைப்பற்ற அப்படியொரு க்ரமம் நேருவதுண்டு. ஆனாலும் அந்த மறுப்புரைகள் மேலே குறித்த இருவரால் வெளிவருகின்றன வென்பதை பிரதிவாதிகள் தெரிந்துகொண்டேயிருந்தார்கள். ஆனால் எதற்கு யார் கர்த்தா? என்பதை நிர்ணயிக்கமாட்டாமல், கோஷ்டீபுரம் ஸ்வாமியென்று ப்ரஸித்தராயிருந்த திருக்கோட்டியூர் ஸௌம்ய நாராயணாசார்ய ஸ்வாமியிடத்தில் சிலர் ப்ரஸ்தாவிக்க, அந்த ஸ்வாமி ஸாதிப்பராம் —'அநந்வயம் க்லிஷ்டாந்வயம் முதலான குற்றங்களில்லாததும் எளிதாக விடையளிக்க நினைக்கமுடியாததுமான க்ரந்தங்களை ப்ரதிவாதிபயங்கரருடைய கிருதியென்று கொள்ளுங்கள்' என்று. இப்படி நான் சொன்னேனென்று அந்த ஸ்வாமியே அடியேனிடம் ஸமயவிசேஷங்களில் ஸாதித்ததுண்டு. அப்படிப்பட்ட நூல்களையும் சேர்த்துக் க்ணக்கிட்டால் எண்ணூறல்ல ஆயிரமேயாகும். இவை திருத்தகப்பனாருடைய திருவாக்கின் ஸூ பரம்பரை யென்றே யெண்ணியிருக்கிறேன். ஸ்வப்நவ்ருத்தாந்த அநுபந்தியாக இவ்வளவும் விஜ்ஞாபித்தபடி. இங்கு மேல்வரும் விஜ்ஞாபனங்கள் முக்கியமானவை.

திருத்தகப்பனார் கனவில் அதிகமாக ஸேவை ஸாதித்து வருவதிலிருந்தும் உரையாடுவதிலிருந்தும் பலபல விஷயங்கள் நினைவுக்கு வந்துகொண்டிருக்கின்றன. என்னுடைய பதினான்கு பிராயமளவே அவர் எழுந்தருளியிருந்தாலும் அதிசயோக்தியின்றிக்கே க்ஷணகாலமும் விட்டுப் பிரியாத நிலைமையிருந்ததனால் பிறர்க்காக அவர் ஸாதிக்கும் பெரிய விஷயங்களும் அவலீலையாகவே தெரிந்து கொள்ளப்பட்டு வந்தன. அவருடைய காலத்தில் அவரைக்காட்டிலும் வயதில் பெரியவர்கள் பலர் இருந்தார்கள். தென்கலையாரிலும் ஸரி, வடகலையாரிலும் ஸரி, ஸ்மார்த்த மாத்வர்களிலும் ஸரி, அவரெதிரில் உட்கார்ந்து நான் பார்த்ததில்லை. நின்றே பேசிப் போவர்கள். இதெல்லாம் இப்போது எதற்காக எழுதுவது? என்று பலர் சிந்திக்கலாம். நான் பிறந்தமாதமும் பங்குனி; அவர் மறைந்தமாதமும் பங்குனி. நாளை மறுநாளில் பங்குனி மாதப்பிறப்பு. கனவனுபவம் சிலநாட்களாக அடுத்தடுத்து ப்ராப்தமாகிறபடியால் ஏதோபித்தன்போலவே யெழுதுகிறேன். நான் எது எழுதினாலும் அன்பும் ஆதரவுங் கொண்டு பார்ப்பவர்கள் பலர் இருப்பதனால் அன்னவர்களின் த்ருப்திக்காகவும், "தரித்திருந்தேனாகவே" என்று திருமழிசைப்பிரான் பணித்தபடி என்னாத்மா தரிப்பதற்காகவும் எழுதுகிறேன்.

திருத்தகப்பனார் இளமையில் எனக்குத் தமது திருக்கையாலெழுதிக்கொடுத்துப் பாடம் செய்வித்த பல்லாயிரம் சுலோகங்களில், அவர் வற்புறுத்திச் சொன்னதும் நானும் நிச்சலும் நினைத்துக்கொண்டிருப்பதுமான சுலோகம் ஒன்று;

*ஏகஸ்மிந்நப்யதிக்ராந்தே முஹூர்த்தே த்யாநவர்ஜிதே,
தஸ்யுபிர் முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும் ந்ருணாம்.*

என்பது. இதன்பொருளாவது, ஒருக்ஷணகாலம் வீணாகக் கழிந்தாலும் கள்ளர்கள் நம்வீட்டினுள்புகுந்து ஸர்வஸ்வத்தையும் கொள்ளைகொண்டுபோனால் எப்படி கதறநேருமோ அப்படி கதறவேணும் என்பதாம். (இதில் த்யானவர்ஜிதே) என்றது ‘எம்பெருமானுடைய சிந்தனையில்லாமல்’ என்றபடியானாலும் த்யானசப்தம் மாநஸிகமான சிந்தனையைமட்டும் சொல்லி நிற்பதன்று. *தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும்* என்ற திருமழிசைப்பிரான் பாசுரத்தில் சொன்னதற்கெல்லாம் இது உபலக்ஷணமாகும். *யந்முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே, ஸா ஹாநிஸ் தந்மஹச்சித்ரம் ஸா ப்ராந்திஸ் ஸா ச விக்ரியா * என்கிற சுலோகமுமொன்று இருந்தாலும் * தஸ்யுபிர் முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும் ந்ருணாம் * என்றதற்கு அது ஈடாகாது. இதைத் திருத்தகப்பனார் பலகாலெடுத்துரைக்கக் கேட்டிருக்கிறேன். தாம் பிறர்க்குச் செய்தருளும் உபதேசங்களில் இதுதான் தலைமைபெற்றிருக்கும். இந்த சுலோகம் இளமை தொடங்கியே அடியேனுள்ளத்தில் ஊறிக்கிடப்பதென்பதைப் பலருமறிந்துள்ளார்கள். அனேகமாகப் பலரும் தினசரிவரவுசெலவுகணக்கு எழுதுவதென்று வைத்துக்கொண்டிருக்கிறார்கள். காய்கறிவாங்கினதையும் காப்பிப்பொடி வாங்கினதையும் கட்டைமிட்டைகள் வாங்கினதையும் எழுதிவரக் காண்கிறோம். இதை நாம் மறுக்கவில்லை. ‘இன்று காலையெழுந்தது முதல் பள்ளிகொள்ளும் வரையில் நாம் நம் ஆத்மாவுக்காக என்ன செய்தோம்’ என்பதை நாடோறும் எழுதிவரவேணுமென்று திருத்தகப்பனார் ஸாதித்துக்கொண்டிருப்பர். அதை அடியேன் அந்நாளே தொடங்கிக் குறிக்கோளில் வைத்திருப்பதுண்டு. விசுவாவஸு பங்குனி விசாகத்திலிருந்து இந்த விஜ்ஞாபனமெழுதத் தொடங்கும் நாள்வரையில் அடியேனுடைய குர்வத்ரூபங்களான கரணங்களை எவ்வெவ்வழிகளில் வியாபரிக்கச் செய்தேனென்பதை விரிவுக்கு அஞ்சாமல் எழுதவேணுமென்று ஆசையுண்டு. அது பலிக்கக்கூடிய ஆசையன்று. இன்னமாதத்தில் இன்னது செய்தேனென்று ஒருவாறு எழுதலாமென்று பாரிக்கிறேன். மாசிமாத முடிவில் இந்த விஜ்ஞாபனமெழுதுவதால், மாசி, தை, மார்கழி, கார்த்திகை என்றிப்படி கீழ் நோக்கிச் செல்கின்றேன். அவர்ஜநீயமாகச் செய்யநேரும் உபந்யாஸங்களை ஸ்வஸ்தானத்திலும் பரஸ்தானத்திலும் செய்ய ப்ராப்தமாகியிருப்பதால் அவற்றை முன்னம் தெரிவிக்கிறேன். இன்னவிடத்தில் இன்ன வுபந்யாஸம் செய்தேனென்றுமட்டும் எழுதிவிடாமல் உபந்யஸித்த விஷயங்களையும் நினைவுக்கு வந்தமட்டில் எழுதிவைக்கிறேன் உபந்யாஸகர்களுக்கு உதவியாக. இதுதானே அடியேனுடைய முழுநோக்கு.

நிகழும் மாசிமாதத்தில் எங்கும் திருக்கச்சிநம்பிகளுத்ஸவமல்லவா? நம்பிகளின் திருவவதாரஸ்தலமான பூவிருந்தவல்லியில் ஏழாமுத்ஸவத்தன்று ஓர் உபந்யாஸம் நடத்த அவ்விடத்து தர்மப்ரவர்த்தகர்கள் கோரியிருந்தார்கள். அன்று அவ்விடத்தில் மற்றொரு பெரிய விசேஷமும் கூடினபடியால் சென்னைப் பெரியார்கள் பெரும்பாலோர் விஜயம் செய்திருந்தார்கள்; பர்யாப்தமான அவகாசமும் கிடைத்தபடியால் உத்ஸாஹமாகப் பேசநேர்ந்தது. திருக்கச்சிநம்பிகளின் மஹோத்ஸவத்தில் அவர் வைபவந்தானே பேசவேண்டும். அந்த வைபவத்தில் தலைமைபெற்றது கைங்கர்யஸாம்ராஜ்யமாதலால் அதைப்பற்றி உபந்யஸித்தேன்.

# கைங்கரியச் செல்வம்

மாஞானிகளால் இருள் தருமாஞாலமென வழங்கப்பட்ட இந்நில வுலகில் அகவிருளையொழிக்க அருட் கடலான எம்பெருமான் சாஸ்திரங்களாகிய பெரு விளக்கை ஏற்றி வைத்தருளினன். “கலைகளும் வேதமும் நீதி நூலும் கற்பமும் சொற் பொருள்தானும் மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினலருள் செய்து” என்ற திருமங்கை யாழ்வார் பாசுரம் இங்கு உணரத்தக்கது. பிரமாணங்களுள் முதன்மை பெற்ற வேதங்களும், அவற்றுக்கு வியாக்கியானமாகத் தோன்றிய இதிஹாஸ புராணங்களும் மற்றும் ஆழ்வாராசாரியர்களின் திவ்ய க்ரந்தங்களுமான நூல்களெல்லாம் கடல்போல் விளங்குவன. அவற்றுள் அறிவிக்கப்படும் அர்த்தங்கள் கடலலைகள் போலவும், கடலில் நுண் மணல்கள் போலவும் எண்ணிறந்துள்ளன வெனினும், அவை மூன்றே வகுப்பில் அடைக்கப்பட்டுள்ளன; தத்த்வம், ஹிதம், புருஷார்த்தம் என்பனவாம் அவை. எது பரம் பொருளோ அதுவே தத்துவமெனப்படும். பரம் பொருளின் பதவிணை சேர்தற்கு எது உபாயமோ அதுவே ஹிதமெனப்படும். பதவிணை சேர்ந்த பின் அனுபவிக்கப்படுமது எதுவோ அதுவே புருஷார்த்த மெனப்படும். சிறிது விரித்துரைப்பின், திருமகள் கொழுநனே தத்துவமென்றும், அவனடியினை சேர்தற்குச் சரணுகதியே உபாயமென்றும், அடி சேர்ந்து அத்தாணிச் சேவகம் புரிதலே புருஷார்த்தம் என்றும் நூற்கொள்கை தேறி நிற்கும்.

இவற்றுள் கடையான புருஷார்த்தத்தைப் பற்றியே இங்குச் சிறிது விவரணங்காட்ட எழுகின்றேன். ஈண்டு நாம் திருக்கச்சி நம்பியின் பெருமையை யனுபவிக்கப் புகுந்ததனுலும், நம்பிக்கு விளைந்த பெருமையெல்லாம் கைங்கரியச் செல்வத்தைப் பற்றியதே யாதலாலும் அதனை விவரித்துப் பேசுவதே நம்பியின் பெருமை யனுபவமாகும். விஷ்ணு ஆலயங்களில் நாதமுனிகள் ஆளவந்தார் போல்வாரான ஆசாரியர்கள் திருக்கோலம் திகழாத இடங்களிலும் திருக்கச்சி நம்பிகளின் திருக்கோலம் திகழக் காணுநின்ரேம். அவர் விசேஷமாக நூல்களை இயற்றி உலகுக்கு உதவி புரிந்தவரல்லர். தேவப்பெருமாள் விஷயமாகத் தேவ ராஜாஷ்டகமென்னும் எட்டு சுலோகங்கள் கொண்ட சிறிய துதிநூல் ஒன்றை மட்டுமே இவர் பணித்துள்ளார். ஆகவே ‘தொண்டர்க் கமுதுண்ணச் சொன் மாலைகள் சொன்னேன்’ என்னும்படியான பெருமையடியாக இவர்க்குத் தேவாலயங்களில் திருக்கோலம் அமைந்ததென்ன இயலாது. “திருவாலவட்டம் திருக்கச்சிநம்பி” என்று உலகம் பரவிய வியபதேசம் பெற்ற இவ்வாசிரியர் கைங்கரியச் செல்வம் ஒன்றினுலேயே மிக்க பெருமை பெற்று விளங்கி ஆலயங்களிலும் சிறப்புப் பெற்றுரென்பர் பெரியோர். ஆகவே இவ்வாசிரியர் திருவுள்ள முகக்குமாறு கைங்கரியத்தின் சிறப்பைப்பற்றிப் பேசுவது இங்கு ப்ராப்தம். அதற்குமுன் நம்பிகளின் அஷ்டகத்தில் முதல் ச்லோகத்தின் பொருட்பொலிவைச் சிறிது அநுபவிப்போம். *நமஸ்தே ஹஸ்திசைலேச ஸ்ரீமந் அம்புஜலோசந!, சரணம் த்வாம் ப்ரபந்நோஸ்மி ப்ரணதார்த்திஹராச்யுத.* என்பது முதல்ச்லோகம். இது தேவப்பெருமானைச் சரணம் புகுவதாகத் தெரிந்துகொள்வதில் அருமை இல்லை. உட்புகுந்து அருமையாகத் தெரிந்துகொள்ளவேண்டிய நுண்பொருள் கேண்மின்.

இதில் ஐந்து [ஸம்போதனங்கள்] விளிச்சொற்கள் உள்ளன. எம்பெருமானுடைய பஞ்சப்ரகாரங்களும் இந்த ஐந்து விளிகளாலும் தெரிவிக்கப்படுகின்றன. திருவாய்மொழியில் *விண்மீதிருப்பாய்! மலைமேல் நிற்பாய்! கடல் சேர்ப்பாய்! மண்மீதுழல்வாய்! இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்!* [6-9-5.] என்கிற பாசுரத்தில் எம்பெருமானுடைய பர வ்யூஹ விபவ அந்தர்யாமியர்ச்சாவதாரங்களாகிற ஐந்து ப்ரகாரங்களும் ஸுஸ்பஷ்டமாக வோதப்பட்டுள்ளன. விண்மீதிருப்பாய்!-பரத்வம். கடல் சேர்ப்பாய்!-வ்யூஹம் மண்மீதுழல்வாய்!-விபவம். இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்!-அந்தர்யாமி. மலைமேல் நிற்பாய்!-அர்ச்சை. மேலெடுத்த நம்பிகளின் சுலோகத்திலும் பஞ்சஸம்புத்திகளால் இங்ஙனே பரத்வாதி பஞ்சகம் சிறிது ஊன்றித் தெரிந்துகொள்ளவேண்டும் வகையில் அமைக்கப்பட்டுள்ளன வென்பதை விளக்கமாக விஜ்ஞாபிக்கிறேன். ஹஸ்திசைலேச! என்பதனால் அர்ச்சாவதார நிர்தேசமென்பது ஸ்பஷ்டம் [ஸ்ரீமந்!] எம்பெருமானுடைய பரத்வநிலையைச் சொல்லுகிற பகவச் சாஸ்த்ரம் *வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:, ஆஸ்தே விஷ்ணு ரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ* என்று பிராட்டியோடுகூட வெழுந்தருளி யிருப்பதாகச் சொல்லுகையாலும், நம்மாழ்வார் தாமும் *ஒண்டொடியாள் திருமகளும் நீயுமேநிலா நிற்பக்கண்ட சதிர் கண்டொழிந்தேன்*என்று திருமகளும்தானுமாக அங்கெழுந்தருளியிருக்கிறபடியை யருளிச் செய்கையாலும் ஸ்ரீமந்! என்றதனால் அந்த பரத்வநிலை தெரிவிக்கப்பட்டதாகும். [அம்புஜலோசந!] செந்தாமரைக்கண் முதலான அவயவஸௌந்தரியத்தைக் காட்டி ஆவர்ஜனம் செய்தது ராமகிருஷ்ணாதி விபவாவதாரங்களிலேயாயிற்று. *சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந!* *கிமர்த்தம் புண்டரீகாக்ஷ!* இத்யாதிகள் விபவாவதாரங்களிலன்றோ அவதரித்தன. அவயவ ஸௌந்தர்ய வர்ணனம் அர்ச்சையிலும் விசேஷமாகவுண்டே யென்னில்; "பெருக்காறு போலே விபவங்கள்; அதிலே தேங்கின மடுக்கள்போலே அர்ச்சாவதாரம்" என்ற ஸ்ரீவசனபூஷண ஸ்ரீஸூக்தி வியாக்கியானத்திலே மணவாளமாமுனிகள்—

> ''அவதாரகுணங்களெல்லாம் அர்ச்சாஸ்தலங்களிலே பரிபூர்ணமாயிருக்கையாலும்,
> அவதார விக்ரஹங்களை அர்ச்சாரூபேண பலவிடங்களிலும் பரிக்ரஹித்துக் கொண்டி
> ருக்கையாலும் *அதிலே தேங்கின மடுக்கள்போலே யென்கிறது''

என்றருளிச் செய்திருக்கையாலே அர்ச்சாவதாரத்துக்கும் மூலம் விபவாவதாரமாகையாலே அதனுடைய முதன்மை உணரத்தக்கது. [ப்ரணதார்த்திஹர.] ஆர்த்தர்களினுடைய கூக்குரல் கேட்டு அவர்களின் ஆர்த்தியைப் போக்குவதற்காகச் சடக்கென வெழுந்து அவதாரம் செய்வதற்கென்றே க்ஷீராப்தியில் வ்யூஹீபவித்து நிற்கையாலே 'ப்ரணதார்த்திஹர' என்றவிளி வ்யூஹத்தில் நோக்காகத் தோன்றியதென்னக் குறையில்லை. இனி அச்யுத! என்கிற ஸம்போதனம் சேஷித்து நிற்கிறது. எம்பெருமானுடைய அச்யுத நாமத்திற்குப் பலவகையான பொருள்கள் சொல்லுவதுண்டு; அவற்றுள் ஒருபொருள்-'ஓரிடத்தையும் விட்டு நழுவாதவர்' என்பது. இத்தால் *எஞ்ஞான்று மெங்குமொழிவற நிறைந்து நிற்கும் அந்தர்யாமித்வம் சொன்னபடியாகும். "ந வித்யதே (குத்ராபி) ச்யுதம் யஸ்ய ஸ:—அச்யுத:." என்று வ்யுத்பத்தி காண்க. ஆக, ஐந்து விளிகளாலும் எம்பெருமானுடைய பஞ்ச ப்ரகாரங்களும் பேசப்பட்டனவாயின. இனி ஆக்ருதமான கைங்கர்யச் செல்வத்தைப் பற்றிச் சிறிது விரிவாகப் பேசவிரும்புகிறேன்.

நாம் பெறவேண்டிய பெரும் பேறு பரமனடியிணையில் பணிவிடை செய்வதேயாம். பணிவிடை யென்பதும் கைங்கரியம் என்பதும் பரியாயமே யாகும். பணிவிடை யென்பது தென் மொழி; கைங்கர்யம் என்பது வடமொழி என்னுமித்தனையே வாசி. கிங்கர: என்னும் சொல்லின்மேல் ப்ரத்யய விசேஷம் ஏறியதனல் கைங்கர்யமென்கிற சொல் தேறுகிறது. "நியோஜ்ய கிங்கர ப்ரைஷ்ய புஜிஷ்ய பரிசாரகா:' என்னும் அமர கோசத்தின்படி பணிவிடை செய்பவன் என்னும் பொருளைக் கொண்டது கிங்கர பதம். 'கிஞ்சித் கரோதீதி கிங்கர:' — ஏதேனும் ஒன்றைச் செய்துகொண்டிருப்பவனென்பது சொல்லின் மேல் தேறும் பொருள். அன்னவனுடைய செயல் கைங்கரியமெனப்படும். பகவான் திறத்திலும், அவனடியார்களான பாகவதர் திறத்திலும் செய்யும் பணிவிடையைக் கைங்கர்யமென வழங்குவர் பெரியோர். கிங்கர: என்பதற்கு மற்ருெருவகையான வ்யுத்பத்தியையும் பெரியார் கூறுவதுண்டு. கிம் கரவாணி? கிம் கரவாணி இதி ஆசம்ஸமாந: கிங்கர:. அதாவது-என்ன தொண்டு செய்வேன்! என்ன தொண்டு செய்வேன்! என்று ஆசைப்படுமவன் கிங்கர னென்றபடி. இது நூல்களிற் காண்பதில்லை. நிற்க.

இங்கே ஒரு சிறு விசாரம். கீழே உதாஹரித்த அமரகோசத்தில் "ஸேவா ச்வவ்ருத்தி:" என்று கூறப்பட்டது. 'பிறர்க்கு உழைப்பது நாய் வேலை' என்பது இதன் பொருள், மநுதர்ம சாஸ்த்ரத்திலும் நான்கா மத்யாயத்தில் 'நாய் வேலையாகிய அடிமைத் தொழில் கொள்ளத் தகாதது' என்று மறுக்கப்பட்டுள்ளது. அதைக் கண்ட ஒரு ரஸிகர் ''ஸேவா ச்வவ்ருத்திரிதி யத் அபத்தம் தத்உதீரிதம், ஸ்வைரசாரீ க்வ சுநக: விக்ரீதாஸு: க்வ ஸேவக:" என்ருர். இதன் கருத்தாவது ''அடிமைப்படுவது நாய்வேலை யென்று மநுமஹர்ஷி கூறியது தவறு; ஒருவர்க்கும் அடிமைப்படாமல் யதேஷ்டமாகத் திரிகிற நாய் எங்கே? நாலு காசுக்கு உயிரை அறவிலை செய்திருக்கும் சேவகன் எங்கே?" என்பதாம். இதனல் சேவகன் நாயினும் கடைப்பட்டவன் என்றதாம். இதைக் கொண்டு கைங்கரியத்தை இழி தொழிலாக நினைக்கலாகாது. வயிற்றை வளர்ப்பதற்காகச் செய்யும் சேவகத் தொழிலே அங்குப் பழிக்கப்பட்டது என்பது மூலத்திலேயே ஸ்பஷ்டமாக வுள்ளது. ஸ்வரூப ப்ரயுக்தமாகவும், குணங்கண்டும் உரிய விஷயங்களில் தொண்டு செய்வது பழிப்புக்கு இலக்காமதன்று. ''கண்டாரிகழ்வனவே காதலன்தான் செய்திடினும், கொண்டானை யல்லாலறியாக் குலமகள்" என்று ஸ்ரீ குலசேகராழ்வாரால் புகழப்பட்ட ஒரு பதிவிரதை தன் கணவனுக்குச் செய்யும் பல்வகைத் தொண்டுகளை இதிஹாஸ புராணங்களிற் கேட்பது தவிர, கட்கூடாகவும் காண்கிருேம். அங்ஙனமே சிஷ்யன் ஆசாரியனுக்குச் செய்யும் பணிவிடைகளும் பிரசித்தம். உபதேச ரத்தின மாலையில் ''பின்பழகராம் பெருமாள் சீயர் பெருந்திவத்தில், அன்பதுவு மற்று மிக்கவாசையினல் – நம்பிள்ளைக்கானவடிமைகள் செய் அந்நிலையை நன்னெஞ்சே. ஊனமற வெப்பொழுதுமோர்" என்று மணவாள மாமுனிகள் அருளிய பாசுரம் அறியாதாரில்லை. ஆசார்ய ஹ்ருதயம் நான்காம் பிரகரணத்தில் "ச்வவ்ருத்தியை மாற்றி ஸ்வவ்ருத்தியிலே மூட்டுகிருர் மூன்ரும் பத்தில்" என்றவிடத்து மணவாளமாமுனிகளின் வியாக்கியானமும் ஸேவிப்பது.

பகவத் ராமாநுஜர் அருளிச்செய்த வேதார்த்த ஸங்க்ரஹத்தின் முடிவில் "நநு ச, அத்யந்த சேஷதைவ ஆத்மந: அநவதிகாதிசயம் ஸுகமிதி உக்தம் பவதி: ததேதத் ஸர்வலோக விருத்தம்" என்று தொடங்கிப் பூர்வபக்ஷ ஸித்தாந்தங்கள் விசதமாக வரையப்பட்டுள்ளன. அங்கு "ஸர்வம் பரவசம் து:க்கம்" "ஸேவா ச்வவ்ருத்தி:" இத்யாதிகளை உத்க்ஷேபித்து ஒருங்க விட்டிருப்பதைக் காணவேணும், அதுவே முமுக்ஷுப்படி ரஹஸ்யத்தில் "சேஷத்வம் துக்க ரூபமாகவன்றோ நாட்டில் காண்கிறதென்னில்; அந்த நியமமில்லை; உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்கும் இருப்பு ஸுகமாகக் காண்கையாலே" என்கிற ஸ்ரீஸூக்திகளால் நிரூபிக்கப்பட்டது. அவ்விடத்து மாமுனிகளின் வியாக்கியானம் காண்க.

துஷ்யந்த சக்ரவர்த்தியின் ஒரு செய்கையைக் கேளீர். இவன் வேட்டையாடச் சென்றபோது கண்வரென்னும் மஹரிஷியின் ஆச்ரமத்திற் புகுந்து, அங்கு சகுந்தலையினிடத்தில் காதல் கொண்டான். அவள் வெய்யிலில் படுகிற தாபத்தைக் கண்டு மனமிளகிச் சொல்லுகிறான்—"ஸம்வீஜயாமி நலிநீதள தாலவ்ருந்தை:, ஸம்வாஹயாமி சரணாவுத பத்மதாம்ரௌ" என்று. அம்மா சகுந்தலே! தாமரையிலையை விசிறியாக்கி வீசட்டுமா? உன் கால்களை என் மடியிலிட்டுக் கொண்டு வருடட்டுமா? என்கிறான். இவனோ சக்ரவர்த்தி; அவளோ ஒரு காட்டுப் பெண். இவன் இந்த வார்த்தை சொல்லுவதற்கு உரியவனா? என்று பார்க்க வேணும். அவள்பாலுண்டான உகப்பு சொல்லுவித்த தத்தனை. ஒரு காமுகனுடைய செய்கையையா உவமை கூறுவது? என்ன வேண்டா. ஸ்ரீ விஷ்ணு புராணம் (1-20-ல்) ப்ரஹ்லாதாழ்வானுக்கு அருள் செய்யத் தோன்றிய ஸ்ரீ ந்ருஸிம்ஹ மூர்த்தி அந்தர்த்தானமடையப் போகிற ஸமயத்தில் வரம் வேண்டுகின்ற அந்த பாலபக்தன் "யா ப்ரீதிரவிவேகாநாம் விஷயேஷு அநபாயிநீ, த்வாம் அநுஸ்மரதஸ் ஸா மே ஹ்ருதயாந் மாபஸர்ப்பது" என்றான். அவிவேகிகளான பாமரர்களுக்குச் சிற்றின்பங்களிலே எவ்வகையான காதல் குன்றாது மேன்மேலும் பெருகிச் செல்லுமோ அத்தகைய காதல் உன் விஷயமாக என் சிந்தனையில் கொழுந்து விட்டு வளர வேணுமென்பது மேலே காட்டின சுலோகத்தின் பொருள். ப்ரஹ்லாதனோ நாலைந்து பிராயச்சிறுக்கன். சிற்றின்பத்தைச் சிறிதும் அறியாதவன். சிற்றின்பங்களிலே பாமரர்களுக்கு எத்தகைய காதல் விளைகின்றதென்பதையும் அறியகில்லான். இப்படியிருக்க, இவன் 'விஷயேஷு அவிவேகிநாம் யா ப்ரீதி:' என்று சொன்னது எங்ஙனம்? என்று விவேகிகள் விமர்சிக்கவேண்டும். துஷ்யந்த மஹாராஜன் போல்வாரான காமுகர்களினுடைய கதைகளைக் கேட்டிருந்து அதனால் சொல்லுகிறானென்ன வேணும். ஆகவே, பகவானுடைய கைங்கரியத்தில் பக்தர்களுக்கு உண்டாகும் அபிநிவேசத்திற்கு விஷயாந்தரங்களில் பாமரர்களுக்குண்டாகும் ருசியை நிதர்சனமாகக் காட்டுதல் ஏற்குமென்க. கீழே நாமெடுத்துக்காட்டிய முமுக்ஷுப்படி ஸ்ரீ ஸூக்தியில் 'உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்கு மிருப்பு ஸுகமாகக் காண்கையாலே" என்றவிடத்தை வியாக்கியானித்தருளா நின்ற மணவாள மாமுனிகள் பாமரர்களின் பணிவிடையையே நம்மாழ்வாருடையஸ்ரீ ஸூக்தியைக் கொண்டு முதலிக்கிறார்.

(திருவாய்மொழி 4-1-5) "பணிமின் திருவருளென்னும் அஞ்சீதப்பைம்பூம்பள்ளி, அணிமென் குழலா ரின்பக் கலவி யமுதுண்டார்'' என்ற பாசுரத்தின் ஈடு வியாக்கியானம் ஸேவிப்பது.

ஆக இவ்வளவால், கைங்கரியம் செய்வதென்பது ஸர்வாத்மநா ஹேயம் என்று நினைக்கத் தக்கதன்று என்பதும், உகப்புக்கு இலக்கான விஷயத்தில் கைங்கரியம் பரமபோக்யமாகு மென்பதும் நிரூபிக்கப்பட்டது. இனி கைங்கரியத்தின் வகைகளை நிரூபிக்கிறோம். மாநஸிகம் வாசிகம் காயிகம் என்று கைங்கரியம் மூவகைப்படும். இவற்றுள், 'அது செய்யவேணும் இது செய்யவேணும்' என்று நெஞ்சால் பாரிப்பதான மாநஸிகம் இருக்கட்டும். வாசிகமான கைங்கரியம் சில அதிகாரிகளுக்கே உற்றதாகும். வேதம் வல்லவர்கள், திவ்யப் பிரபந்தமோதினவர்கள், ஸ்தோத்ர நூல்களை யதிகரித்தவர்கள் வாசிக கைங்கரியம் பண்ணவுரியார். இக்கைங்கரியம் எம்பெருமானுக்கு ப்ரீதி கரமேயாகும். இதைவிட மேம்பட்டது காயிக கைங்கரியம். திருவிளக்கெரிக்கை, திருமாலையெடுக்கை, ஸ்ரீபாதம் தாங்குதல், சாமரை வீசுதல், குடை பிடித்தல் முதலியவை காயிக கைங்கரிய மெனப்படும். இவற்றுள் ஒன்றான திருவாலவட்டம் பணிமாறுதலாகிய தொண்டைக் கடைப்பிடித்தவர் திருக்கச்சிநம்பி. ஆலவட்டமென்று விசிறிக்குப் பெயர். ஆழ்வார்களில் தொண்டரடிப் பொடிகள் "தொடை யொத்த துளபமுங் கூடையும் பொலிந்து தோன்றியதோள் தொண்டரடிப்பொடி யென்னும் அடியன்" என்றும் "துளபத் தொண்டாய தொல்சீர்த் தொண்டரடிப்பொடி" என்றும் தாமே பணித்தபடி அர்ச்சைத் திருமேனியில் துளபமும் கூடையும் பொலிந்து தோன்றுவது போலத் திருக்கச்சி நம்பிகளும் ஆலவட்டமும் கையுமாகவே எங்கும் காட்சி தருவர். ஆசார்ய ஹ்ருதயத்தில் (1-85) "புஷ்பத்யாக போக மண்டபங்களில் பணிப் பூவு மாலவட்டமும் வீணையுங் கையுமான அந்தரங்கரை" என்ற விடத்தில் ஆலவட்டமும் கையுமான அந்தரங்கராக வ்யபதேசிக்கப் பெற்றவர் திருக்கச்சி நம்பிகள்.

காயிக கைங்கரியத்திற் காட்டிலும் தனத்தால் செய்யுமது சிறந்ததென்று சிலர் நினைப்பதும் சொல்லுவதுமுண்டு. அது எம்பெருமான் திருவுள்ளத்தால் சிறப்புற்றதாகாது. ஏனெனில், நாம் சரீரத்திலே அதிகமான அன்பு செலுத்துகிறோமா? தனத்திலே அதிகமான அன்பு செலுத்துகிறோமா? என்று ஆராய்ந்து பார்ப்போமாயின், தனத்திற் காட்டிலும், சரீரத்திலேதான் மிக்க பிரேமம் காட்டுகிறோமென்பது கட்கூடு. இதைப் பலமுகமாக நிரூபிப்போம். பெருங்குற்றஞ் செய்தவொருவனுக்கு அரசன் 'ஆயிரம் ரூபா அபராதம், அது கட்டத்தவறினால் ஒரு வாரம் காவல்' என்று சிக்ஷை விதித்தால் தரித்ரனும் சரீரத் துன்பத்தை ஸஹிக்க மாட்டாமல் பணத்தைச் செலுத்துகிறானே யொழிய, 'ஆயிரம் ரூபா எதற்காகச் செலுத்துவது! ஒருவாரம் சிறையிருந்து வந்து விடலாமே' என்று நினைத்துச் சிறையிருக்க இசைவதில்லை. பெருமாள் திருத்தேரிலெழுந்தருள, வடம் பிடிக்க வாருங்கள் என்றழைத்தால் 'வேணுமானால் பத்தெட்டுரூபா தருகிறேன் கொண்டு போங்கள்; இந்த வேலைக்கு நாம் வாரோம்' என்பர்களேயன்றிப் பெருப் பேறான இக்கைங்கர்யம் செய்ய இதோ வருகிறேன்' என்று சொல்லி வடம் பிடிக்க வருவாரில்லையே பெரும்பாலும். இங்ஙனே எவ்வளவு காட்டவேணும்?

சிலர் பணத்தைக் கனக்க மதித்து சரீரத்தை அலக்ஷியம் செய்வாருமுளர். திருவாய்மொழியில் (4–9–2–) 'சாமாறும் கெடுமாறும்' என்ற விடத்து ஈட்டில் ஒரு அற்புதமான கதை யருளிச் செய்கிறார் காண்மின்; ஒரு ராஜத்ரோஹியைத் தண்டிக்கும் அரசன் கையையும் காலையும் தெறித்து விடக் கட்டளையிட, ராஜபடர்கள் அப்படியே செய்தாயிற்று. உதிரமொழுக வொழுக வீடு வந்து சேர்ந்திருக்கிறான். சில நாழிகையில் உயிர் துறக்கப் போகிறான். உற்றாரும் உறவினரும் வந்து 'ஐயோ! இப்படியாயிற்றே!' என்று கண்ணீர் பெருக்கி வருந்தி நிற்க, தண்டனையுண்ட இவன் (சொல்லுகிறான்—)'ஐந்நூறு தா, ஆயிரம் தா' என்று சொல்லிக் காசு பறித்துக்கொள்ளாதே இவ்வளவோடே போனது உங்கள் ஆசீர்வாத பலமல்லவா? என்றானும். இன்னமும் கேளீர். முற்காலத்துத் தண்டனைகள் பல விதமாயிருக்கும். தோசைக் கல்லைப் பழுக்கக் காய்ச்சி அதன்மேல் உட்காரச் சொல்லுவர்களாம். அந்தக் கல்லில் அரைத் துணியோடு உட்கார்ந்தாலும் கேள்வியில்லை. தண்டனையுண்ட ஒருவன் துணி எரிந்துபோனால் காசு நஷ்டமாகுமே யென்று அரைத்துணியை அவிழ்த்து வைத்துவிட்டு உட்கார்ந்தானாம். இவர்கள் சரீரத்தை அலக்ஷியம் பண்ணிப் பணமே கண்ணாயிருப்பவர்கள். மற்றொரு கதையுங்கேண்மின். ஒரு குற்றவாளிக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. "முப்பது ரூபா அபராதம் செலுத்த வேண்டியது; தவறினால் முப்பது சாட்டையடி படவேண்டியது; அதுவும் தவறினால் மூன்று விரல்களை யெடுக்க இசையவேண்டியது" என்று. எளிதாக முப்பது ரூபாயைச் செலுத்திவிட்டுப் போகலாமிவன்; பணம் கொடுக்கப் பின்வாங்கி முப்பது சாட்டை யடிக்கு இசைந்து நின்றான். பத்தடிக்குமேல் தாங்க முடியாமற் போகவே சிறிது நேரம் பொறுத்து மூன்று விரல்களை யெடுக்க ஸம்மதித்து நின்றான்; இரண்டு விரல்களை எடுத்தபின் சகிக்க முடியாமற் போக, முப்பது ரூபாயை வைத்திட்டுக் கும்பிட்டுப் போனான். 10 சாட்டையடிகளும் பட்டு இருவிரல்களையுமிழந்து முடிவாக, வேண்டாவெறுப்புடனே பணத்தைச் செலுத்தினான். இத்தகைய பணப் பிசாசுகளிடத்தில் பகவான் பணத்தாற் செய்யும் கைங்கரியத்தையே பேணுவான். பணத்தைப் பொருள் படுத்தாது சரீரத்தைக் கனக்கப் பேணுமவர்களிடத்தில் சரீரத்தைச் சிரமப்படுத்திச் செய்யும் கைங்கரியத்தையே பேணுவான்.

பொதுவாகச் சரீரத்தைச் சிரமப்படுத்திச் செய்யும் கைங்கர்யமே உத்தமமாகக் கருதப்படும். ஆகவேதான் பெரியாழ்வார் திருப்பல்லாண்டில் (3) "வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல் வந்து மண்ணும் மணமும் கொண்மின்" என்று சொல்லியழைத்தார். இதில் மண் கொள்ளுகை மணங் கொள்ளுகை என்று இரண்டு கூறப்பட்டது. எம்பெருமானுடைய உத்ஸவங்களில் உடலால் சிரமப்பட்டுச் செய்யும் கைங்கரியம் மண் கொள்ளுகை. இஃது இடையூறின்றி நடைபெற வேணுமென்று அபிமானிக்கை மணங்கொள்ளுகை.

முடிவாக ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்தில் கைங்கர்யமே பரமபுருஷார்த்தமாகக் கொள்ளப்பட்ட தென்பது உணரத் தக்கது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் நான்காம் பதிகத்தில் தூது விடத் தொடங்கும் போதே "முன் செய்த முழுவினையால் திருவடிக்கீழ்க்குற்றேவல் முன் செய்ய முயலாதேன் அகல்வதுவோ விதியினமே" என்றார். 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலாவடிமை

செய்ய வேண்டும் நாம்' என்று கைங்கரியத்தையே பாரித்தார். *உற்றேனுகந்து பணிசெய்து உனபாதம் பெற்றேன்* என்றே நிகமனம்செய்தார். பெரியாழ்வார். *திருப்பல்லாண்டில் *நியதமுமத்தாணிச் சேவகமும்...தந்து என்னை வெள்ளுயி ராக்கவல்ல* என்றருளிச்செய்து, அடுத்த திவ்யப்ரபந்தத்தின் முடிவில் 'உனக்குப் பணி செய்திருக்குந் தவமுடையேன்' என்றூர். ஆண்டாளும் திருப்பாவையில் 'குற்றேவ லெங்களைக் கொள்ளாமற் போகாது—உனக்கே நாமாட் செய்வோம்' என்றுள். தனது திருமொழியிலும் "கேசவ நம்பியைக் கால் பிடிப்பாள் என்னு மிப்பேறெனக். கருள்கண்டாய் * என்றும், * 'பள்ளி கொள்ளுமிடத்து அடிகொட்டி டக் கொள்ளுமாகில் நீ கூடிடுகூடலே" என்று மருளிச் செய்தாள். இவற்றை அடியொற்றி ஆளவந்தார் "கதா அஹம் ஐகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ் யாமி" என்றூர். எம்பெருமானூர் சரணாகதி கத்யத்தில் பிரார்த்தித்தது 'நித்ய கிங்கரோ பவாநி' என்று. அரங்களிடம் அருள் பெற்றதும் நித்ய கிங்கரோ பவ' என்றே. இவையெல்லாம் அனுஷ்டான சேஷமாகக் கண்டது திருக்கச்சி நம்பி களிடத்திலே யாதலால், இவருடைய பெருமை ஒப்புயர்வற்ற தென்று தலைக்கட்டி *
நிற்கிறோம். .... .... ... .... ....

[பூவிருந்தவல்லியில் திருக்கச்சிநம்பிமஹோத்ஸவத்தில்
ஆற்றிய சொற்பொழிவு, முடிந்தது. 16-2-67]

## 2. திருநாங்கூருபந்யாஸம்

இனி மாசிமாதத்திற்குக் கீழதான தைமாதத்திற் செல்லுகிறேன். இம் மாதத்தில் திருநாங்கூரில் நடைபெற்ற தையமாவாஸ்யை யுத்ஸவத்தில் அந்வயிக்க பாக்யம் வாய்த்ததனுல் அங்கு நிகழ்த்திய ஒருபந்யாஸமும், தையில் மகத்தில் ஸ்ரீயதோக்தகாரி எம்பெருமானுடைய பைந்நாகப் பாய்சுருட்டி மஹோத் ஸவத்தில் பாலாற்றுத்திருவோலக்கத்தில் நிகழ்த்திய ஒருபந்யாஸமுமாக இரண்டு உபந்யாஸங்களை விவரிக்க விருப்பம். க்ரமேண விவரிக்கிறேன். சென்ற ஸ்ரீராமாநுஜனிதழில் (220ல்) திருநாங்கூர் மஹோத்ஸவம் என்ற தலைப்பின்கீழ் விவரித்தபடி மணிமாடக்கோயில் திருவாசற்பந்தலில் மங்களாசாஸன மஹோத் ஸவம் தலைக்கட்டினபிறகு பதினோரெம்பெருமான்களும் திருமங்கை மன்னனும் மணவாளமாமுனிகளும் உள்ளே யெழுந்தருளியானபின்பு திருமஞ்சனத்துக் கிடையில் உபந்யாஸம் நடைபெற்றது. அந்தப் பதினோரெம்பெருமான்களில் 'ஆதி நடு அந்தம்' என்னும்படி எம்பெருமான்கள் மூவரை விஷயமாகக்கொண்டு பேசலாயிற்று. ஆதி—மணிமாடக்கோயில்மணுளன். நடு—வண்புருடோத்தமம். அந்தம்-பார்த்தன்பள்ளி. ஆக இம் மூவருடைய குணனுபவம் நிகழ்ந்தது.

1. மணிமாடக்கோயில் – நந்தாவிளக்கு. இத்தலத்திற்குத் திருமங்கை யாழ்வாரிட்டருளின பதிகம் 'நந்தாவிளக்கே' என்று தொடங்கப்பட்டதனுல் லௌகிகமான விளக்கைவிட்டு வைதிகமான விளக்கைப்பற்றின விவரணம் நடை பெற்றவாற்றைக் கேண்மின். ஆழ்வார்களின் திவ்யஸூக்திகளில் எம்பெருமான் பலவிடங்களில் விளக்காகக் கூறப்பட்டான். *வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்கு* ஆயர்குலத்திளில் தோன்று மணிவிளக்கு * ஆயர்பாடிக்கணிவிளக்கு* இத்யாதிகள் விபவாவதாரங்களைப் பற்றவும், * வேடார் திருவேங்கடம்மேய

விளக்கே* *முனியே திருமூழிக்களத்துவிளக்கே* இத்யாதிகள் அர்ச்சாவதாரத்தைப் பற்றவும், *வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்தவிளக்கு* மிக்க ஞான மூர்த்தியாய வேதவிளக்கு* இத்யாதிகள் பொதுவான நிலைமையைப் பற்றவும் அவதரித்துள்ள பாசுரங்கள். உலகில் விளக்கின் தன்மையை நாம் எவ்வண்ணமாகத் தெரிந்துகொண்டிருக்கிறேமென்றால் தீபம் ஸ்வபரப்ரகாசகம் என்று தெரிந்துகொண்டிருக்கிறேம். எவரும் விளக்கைப் பார்ப்பதற்கு இன்னொரு விளக்கு வேண்டாதபடி தன்னைத் தானே காட்டிக் கொடுக்கையாலே ஸ்வப்ரகாசகத்வமென்பது தேறிற்று. விளக்கு இல்லாதபோது காணமுடியாத பொருள்களையெல்லாம் விளக்குதான் காட்டிக் கொடுக்கையாலே பரஹுகாசகத்வமும் தேறிற்று. லௌகிகமான விளக்கு ஆபேக்ஷிகமாகையாலே அதினுடைய பரப்ரகாசகத்வம் ஸங்குசிதமாயிருக்கும். எம்பெருமானுகிற விளக்கு ஸர்வவ்யாபகமாகையாலே எங்குமுள்ள எல்லாப்





பதினேரெம்பெருமான்களின் மங்களாசாஸன ஸமயம்.

பொருள்களையும் எப்போதும் ப்ரகாஶிப்பித்துக்கொண்டிருக்கும். லௌகிகமான விளக்கு குருடர் முதலானார்க்கு எதையும் ப்ரகாஶப்படுத்தமாட்டாததுபோல எம்பெருமானாகிற விளக்கும் பக்திஸித்தாஞ்ஜநபூஷிதமான அகக்கண் இல்லாதார்க்கு எதையும் ப்ரகாஶப்படுத்தமாட்டாமலிருப்பதில் வியப்பில்லை. விளக்காக எம்பெருமானை யநுஸந்திப்பவர்களுக்கு அவன் தன்னையுங்காட்டிக் கொடுத்துத் தன்னுடைய விபூதிகளையுமெல்லாம் விசததமமாகக் காட்டிக் கொடுக்கையாலும், இந்த விளக்கு ஒருநாளும் அணையாததாகையாலும் நந்தாவிளக்கென்றது மிகப்பொருத்தம். பரவ்யூஹவிபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களாகிற பஞ்சப்ரகாரங்களையும் எம்பெருமான் நன்கு ஸாக்ஷாத்கரிப்பிக்க, கண்டேன் கண்டேனென்று சொல்லி ஸாக்ஷாத்கரித்தவர்கள் நம் ஆழ்வார்கள்.

ஆசார்ய ஹ்ருதயத்தில் "முந்நீர் வாழ்ந்தார் சூட்டுங் கோவை ஆழியென்கிற ஸாக்ஷாத் க்ருத ஸ்வபர வ்ருத்தாந்தர்க்கு'' என்றருளிச் செய்ததை இங்கே அநுஸந்திப்பது. இந்த சூர்ணையில் *சூட்டும் என்றெடுத்த சந்தையின் பொருளைமட்டும் இங்கு விவரிக்கின்றேன். (திருவிருத்தம். பா. 21) *சூட்டுநன் மாலைகள் தூயன வேந்தி, விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபந்தரா நிற்கவே யங்கு, ஓர்மாயையினாலீட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப் போந்து இமிலேற்றுவன் கூன் கோட்டிடை யாடினை கூத்து, அடலாயர் தங் கொம்பினுக்கே* நித்யஸூரிகளும் முக்தாத்துமாக்களும் பரமபத நாதனுக்குத் திருவாராதன உபகரணங்களை ஏந்திக் கொண்டு ஆராதிக்க ஆரம்பித்து தூபம்



திருநாங்கூரில் உபந்யாஸ ஸமயம்

ஸமர்ப்பிக்கின்றபோது புகையினால் திருமுகமண்டலம் மறையும்; பிறகு தீபம் ஸமர்ப்பிக்கும்போது திருமுக மண்டலம் விளங்கும். இந்த தூப தீபங்களினிடையே எம்பெருமான் திருவாய்ப் பாடிக்கெழுந்தருளி நவநீத சௌர்யாதிகளையும் * நீளாதுங்க ஸ்தந கிரி தட ஸுப்திமுதலனவைகளையும் முடித்துக் கொண்டு சென்று நின்று அந்த நித்ய முக்தர்களுக்குக் காட்சி தரும்படி சொல்லிற்று. இது உத்ப்ரேக்ஷை யன்று உல்லேகமன்று; *கமலக்கண்ணனென் கண்ணினுள்ளான்

காண்பனவன் கண்களாலே* என்கிறபடியே அவன்தந்த கண்ணாலே கண்டு பேசினதராயிற்று. காணமுடியாதவற்றையும் காட்டிக்கொடுக்குந்தன்மை தனக்குண்டென்பதை எம்பெருமான் (கீதையில்) அர்ஜுநனை நோக்கி *திவ்யம் ததாமி தே சக்ஷு:* என்று தான் சொல்லியும் *பச்யாமி தேவாந் தவ தேவ! தேஹே* என்று அவனைக்கொண்டு சொல்லுவித்தும் மூதலித்தானாயிற்று. ஆக ஸ்வப்ரகாசகத்வமும் பரப்ரகாசகத்வமும் வடிவான விளக்கின் தன்மையை நந்தாவிளக்கான எம்பெருமான் பக்கலிலே கண்டோம்.

விளக்கைக் காண்பதற்கு வேறொரு விளக்கு வேண்டாவென்று கீழேசொன்னோம். இந்த நந்தாவிளக்கைக் காண்பதற்கு இன்னொரு விளக்கு வேண்டியிருக்கையாகிற வைதர்ம்யத்தையும் காணா நின்றோம். இந்த விளக்கைக் காணவன்றோ *ஞானச்சுடர் விளக்கேற்றினேன்* *உய்த்துணர்வென்னு மொளிகொள் விளக்கேற்றி வைத்து அவனை நாடி* என்று பூதத்தாரும் பேயாரும் பேசினார்கள். அந்த ஞான விளக்குக்கும் மூலமாக மானவிளக்கென்று ஒன்றுண்டு; அதை பட்டர் அருளிச்செய்தார் *மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி* என்று. மாநமாவது ப்ரமாணம்; *ஆதௌ வேதா: ப்ரமாணம்* என்று மூலப்ரமாணமாகச் சொல்லப்பட்ட வேதமே முதல் விளக்கு. அதிலிருந்து ஞானச்சுடர் விளக்கையேற்றி நந்தாவிளக்கைக் காணவேணும். இந்த ப்ரஸங்கத்தில் ஸ்வாநுபூதமான இதிஹாஸமொன்றை விஜ்ஞாபிக்கிறேன். (அதாவது)—முதன்முதலாக மலைநாட்டுத் திருப்பதி யாத்திரை விடைகொண்டபோது திருக்காட்கரையிலிருந்து திருமூழிக்களம் நடந்து செல்லுகின்றேன். சிலர் உடன் வருகிறார்கள். வரப்புப் பாதையில் நாங்கள் செல்லவேண்டியிருந்தது; "ஒளியவன் விசும்பியங்கும்தேரும் போயிற்றுத் திசைகளும் மறைந்தன" என்னும்படியானஸமயம், திக்குத் தெரியவில்லை. ஒன்றும் தெரியவில்லை. ஜனஸஞ்சாரமுமில்லை. வந்த வழியே திரும்பிப் போகவும் முடியவில்லை திகைத்து நிற்கையில் வயலுக்குள்ளே வார்த்தையொலி கேட்டது; எம்பெருமான் யாரையோ காட்டிக் கொடுக்கிறானென்று மகிழ்ந்து 'யாரப்பா! வழிதெரியவில்லையே, ஒன்றும் தெரியவில்லையே. கொஞ்சம் அருகே வா அப்பா!' என்றேன். மலையாளியான அவன் எப்படியோ பாஷை புரிந்துகொண்டு, அங்குத் தான் கீழேவைத்திருந்த லாந்தல் விளக்கை யெடுத்துத் தூக்கிக்காட்டி வாருங்கள் என்றான்; உடனே எனக்கு 'முனியே திருமூழிக்களத்து விளக்கே' என்ற திருமங்கையாழ்வார் பாசுரம் நினைவுக்கு வந்திட்டது. இது லாந்தல் விளக்கன்று, திருமூழிக்களத்து விளக்கு என்று சொல்லிக் கூத்தாடுகிறேன். கூடவந்தவர்களில் இருந்த நால்வர் அத்யாபகர்கள். அவர்கள் சொன்னார்கள் – திருமங்கையாழ்வாரும் இப்படியே இருட்டில் வந்து திகைத்து விளக்கு காட்டக் கண்டே *மூழிக்களத்து விளக்கே! என்றும் *மூழிக்களத்து விளக்கினை யென்றும் ஸாதித்தார் போலும் என்று. திருநெடுந் தாண்டகத்திலும் *திருமூழிக்களத்தானாய்! என்பதற்கு முன்னே *பின்னானார் வணங்குஞ் சோதி என்றதும் விளக்கின் சோதியையே போலும். ஸ்ரீவசனபூஷணத்தில் "ப்ரபத்திக்கு அபேக்ஷிதங்களான ஸௌலப்யாதிகள் இருட்டறையில் விளக்குப் போலே ப்ரகாசிப்பது இங்கே" என்றருளிச்செய்தது இங்கே விஸ்தரிக்கப்பட்டது.

ஆக, எம்பெருமானுகிற விளக்கைக் காண ஞானச்சுடர் விளக்குவேணும்; அந்த விளக்கைப் பெறுவதற்கு வேதவிளக்குவேணும் என்றேம். இந்த விளக்குக்கும் மூலமாக ஒரு விளக்கு உண்டு; அதனை முதன் முதலாகத் திருமழிசைப் பிரானும், முடிவாகத் திருமங்கையாழ்வாரும் பணித்தருளினர். திருச்சந்தவிருத்தத்தில் * தோன்று சோதி மூன்றுமாய் துளக்கமில் விளக்கமாய் * என்ற விடத்தில் துளக்கமில்லாத விளக்காகச் சொன்னதும், பெரிய திருமொழியில் (8-9-4)* *மிக்கானை யென்று தொடங்கும் தக்கான் பாசுரத்தில் *மறையாய் விசிந்தவிளக்காகச் சொன்னதும் ஸாக்ஷாத்தாக எம்பெருமானைச் சொன்னதன்று; * அகாரோவை ஸர்வா வாக்* (*அகரமுதலவெழுத்தெல்லாம்*) என்கிறபடியே ஸகல வேதங்களும் அகாரத்தில் நின்றும் தோன்றினவாகையாலே மேற்சொன்ன இரண்டிடத்திலும் அகாரமே விளக்காகச் சொல்லப்பட்டு வாச்யவாசகபாவ நிபந்தநமான ஸாமாநாதி கரண்யத்தாலே எம்பெருமானைச் சொல்லுகிறதாக மணவாளமாமுனிகள் விவரணம் காட்டியருளுகையாலே அகாரம் ஒரு விளக்காயிற்று. இவ்வளவால், பரமப்ரமேய பூதனை எம்பெருமானும் ப்ரமாணமும் ப்ரமாண மூலமும் விளக்கெனப்பட்டது. இவைபோலே, ப்ரமாதாக்களையும் விளக்காகச் சொல்லியிருப்பதுண்டு-*அல்லி நாள் தாமரைமேல்....தென்புதுவை வேயர்பயந்த விளக்கு* என்று. ஆக மணிமாடக்கோயில் நந்தாவிளக்கு உடந்யாஸம் ஒருவாறு தலைக்கட்டப்பட்டது.

2. *அடுத்தது வண்புருடோத்தம வுபந்யாஸம். பெரியதிருமொழியில் (4 2) *கம்பமாகடலடைத்து* என்பது வண்புருடோத்தமப்பதிகம். இதில் பலன்கூறும் நிகமனப்பாசுரத்தில் *இப்பத்தும் வல்லார், உலகிலெண்ணிலாத பேரின்ப முற்று இமையவரோடுங்கூடுவரே* என்று பல கீர்த்தனம் காண்கிறது. மண்ணுலகிலுள்ளதெல்லாம் சிற்றின்பமென்றும் * முகில்வண்ண வானத்திமையவர் சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே* என்றதிருவாய்மொழியின்படி விண்ணுலகில்தான்பேரின்ப வெள்ளமென்றும் நினைத்திருப்பதும் சொல்லிப்போருவது முண்டு. *சிந்தை மற்றொன்றின் திறத்த தல்லாத்தன்மை தேவபிரானறியும்* இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன்* என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணவே* என்னு மருளிச்செயல்களினல் நலமந்தமில்லதோர் நாடாகிய பரமபதத்தையும் த்ருணீகரித்திருக்குமவர்கள் இவ்வுலகில்தான் எண்ணிலாத பேரின்பமுறுவர்களென்னத் தட்டுண்டோ? எண்ணிலாத என்பதற்கு ‘அஸங்க்யேயமான’ என்கிற பொருள் தவிர, ‘அவரவர்கள் தாம் எண்ணாத’ என்கிற பொருளும் பொருந்துமாதலால் நம்முடைய சிந்தைக்கும் கோசரமல்லாத பேரின்பங்களை நாம் அனுபவித்து வருகிறோமென்பதை உற்று நோக்கவேணும்.

பெரியாழ்வார் *நாவலம் பெரிய தீவினில் வாழும் நங்கைமீர்களிதோ ரற்புதங்கேளீர்* என்று உகந்து உள்ளம் பூரித்து உரைக்கும்படியான அரிய பெரிய ஜம்பூத்வீபத்திலே பரதகண்டத்திலே நாம் பிறவி பெற்றது முதற் பேரின்பம். அதுதன்னிலும் க்ரிமிகீட பசுபதங்காதி ஜன்மங்களிலன்றிக்கே * மானிடப்பிறவி

யந்தோ மதிக்கிலர்* என்று மங்கையர்கோன் மதிக்கும்படியான துர்லப மாநுஷ யோனியிலே பிறவிபெற்றது இரண்டாவது பேரின்பம். அந்த மானிடப்பிறவியிலும் ஸ்வாத்யாய ப்ரவசனங்களுக்கு உரித்தல்லாத யோனிகளிலே புகாமல் வேதமோத நிலமான அந்தணர்குலத்திலே நாம் தோன்றியது மூன்ருவது பேரின்பம். அதுதன்னிலும் *த்ருச்யம் மித்த்யா த்ருஷ்டிக்ர்த்தா ச மித்த்யா தோஷோ மித்த்யா* என்று எல்லாம் மித்த்யை யென்றிருக்கையன்றிக்கே *பொய்யைச் சுரக்கும் பொருளைத் துறந்து இந்தப் பூதலத்தே மெய்யைப் புரக்குமிராமானுசன்* என்று அமுதனுர் போற்று மிராமானுசனை வழிபடுங்குடியிலே பிறக்கப்பெற்றது நான்காவது பேரின்பம். இவ்வளவுக்கும் மேற்பட—கருவிலேயிறத்தல், பிறந்ததும் மறைதல், சிலநாளிருந்து சாதல், பிணிபசிகளால் வருந்தி வாணுளை வீணுளாகக் கழித்தல் முதலிய ஆபத்துக்களின்றிக்கே *வேதநூற்பிராயம் நூறிலே பெரும் பகுதியை ஆனந்தமயமாகச் செலுத்தப் பெற்றிருப்பது ஐந்தாவது பேரின்பம். இத்தனைக்கும் மேலாக *மணவாள மாமுனிவன் பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளைப்போற்றுங்குடியில் பிறவி பெற்றிருப்பது ஆருவது பேரின்பம். இங்கு ஏககாலத்திலே பதிஞெரெம்பெருமான்களையும் ஆழ்வார்களில் கடைக்குட்டியான திருமங்கை மன்னனையும், ஆசாரியர்களில் கடைக்குட்டியான மணவாளமாமுனிகளையும் ஸேவிக்கப்பெறுவதும் அவர்களது திவ்யஸூக்தி யமுதங்களை இங்ஙனே குழாங்கூடி யநுபவிக்கப்பெறுவதும் *உலகிலெண்ணிலாத பேரின்ப மென்னத் தட்டுண்டோ? இதுவேதான் பேரின்பவெள்ளம்.

"உலகிலெண்ணிலாத பேரின்பமுற்று" என்கிற ஶ்ல ச்ருதிப்பாசுரத்தின் வியாக்கியானமாகவன்ரோ இப்போது பேசிவருகிறேன். திருமங்கையாழ்வாருடைய ஸ்ரீஸூக்தியின் பெருமையைப் பற்றித் தனியனிட்டவர்கள் *நெஞ்சுக்கிருள் கடிதீபம் .........ஆரண சாரம்* என்று வேதஸாரமாகக் கூறியிருப்பதால் வேதபுருஷன் பேசியுள்ள *எண்ணிலாத பேரின்பத்தையும் சிறிது பேசுகின்றேனிங்கு. தைத்திரீய-உபநிஷத்தில் ஆனந்தவல்லி யென்பது ஒரு பகுதி. அதில் பரப்ரஹ்மத்தினுடைய ஆனந்தம் அளவிட முடியாததென்று ஓதக்கருதிய வேதபுருஷன் அதை ஒரேவார்த்தையில் சொல்லி முடிக்கலாமாயிருக்க, அங்ஙனம் சொல்லாமல், உலகத்தில் ஒரு மநுஷ்யனுக்கு எளிதாக ஸம்பவிக்க முடியாத ஆனந்தத்தை யெடுத்துக்கூறி அத்தகைய ஆனந்தம் வாய்ந்த ஒரு மநுஷ்யனிருப்பதாக வைத்து, அவனுக்கு மேன்மேலாகப் பலபேர்கள் இருப்பதாகவும் வைத்து, கீழ்ச் சொல்லப் பட்டவர்களைக் காட்டிலும் மேன்மேலும் சொல்லப்படுகிறவர்களின் ஆனந்தம் நூறுமடங்கு அதிகமாக இருப்பது போலவுங் கற்பித்துக்கொண்டுபோய் அப்படிப் பெருக்கிக் கடைசியாகத் தேறும் ஆனந்தம் பரப்ரஹ்மானந்தம்-என்று சொல்லப் பார்த்து அதிலும் த்ருப்திபெருமல் *யதோ வாசோ நிவர்த்தந்தே* என்ருேதிநின்றது. ப்ரஹ்மானந்த மிருக்கட்டும். *ஸைஷா ஆநந்தஸ்ய மீமாம்ஸா பவதி* என்று ஆரம்பித்து முந்துற முன்னம் மநுஷ்யானந்தத்தைச் சொல்லுகிறது. ["யுவா ஸ்யாத் ஸாதுயுவாத்யாயக:. ஆசிஷ்டோ த்ருடிஷ்டோ பலிஷ்ட:. தஸ்யேயம் ப்ருதிவீ ஸர்வா வித்தஸ்ய பூர்ணு ஸ்யாத். ஸ ஏகோ மாநுஷஆநந்த:."] இந்த வாக்யங்களைச் சிறிது விவரிக்கிறேன். [யுவா ஸ்யாத்.] *முற்றமூத்துக்

கோல் துணையா முன்னடிநோக்கி வளையாமலும், *முதுகுபற்றிக் கைத்தலத்
தால் முன்னொரு கோலூன்றாமலும், *கண்ணுஞ்சுழன்று பீளையோடு ஈளை
வந்தேங்காமலும் எப்போதும் யௌவன பருவமாகவே யிருக்கப்பெறுதல். [ஸாது
யுவாத்யாயக:] தன்னோடொத்த யுவாக்களை நன்கு ஓதுவிக்கவல்லவனா
யிருத்தல். தான் நன்றாக ஓதினவனா யிருத்தலென்பது இத்தால் அர்த்தாத்
ஸித்தம். தான் ஓதாமல் பிறரை யோதுவித்தல் அரிதாதலால். ஆக *அதீத
மத்யாபித மார்ஜிதம் யச:* என்னும்படி யிருக்கை சொல்லிற்றாயிற்று. இதற்கு
மேல் [ஆசிஷ்ட:] இதற்கு மூவகைப்பொருள் கூறப்படுகிறது. (1) ஆசீர்வாதத்
திற்கு உரியவன். (அதாவது) நற்குணமிகுதிகண்டு நீ பல்லாண்டு பல்லாண்டு
வாழவேணுமென்று பெரியோர்களால் வாழ்த்தத் தகுந்தவனாயிருக்கை.* ஸ்த்ரியோ
வ்ருத்தாஸ் தருண்யச் ச ஸாயம்ப்ராதஸ் ஸமாஹிதா:, ஸர்வாந் தேவாந் நமஸ்
யந்தி ராமஸ்யார்த்தே யசஸ்விந:* என்று இராமபிரானுடைய குணங்களிலீடு
பட்ட அயோத்யாவாஸிகள் அல்லும் பகலும் அவனுக்காக ஸர்வதேவதா நமஸ்
காரம் பண்ணி வந்தார்களென்பதை இங்கு நினைப்பது. இத்தால் ஸர்வஜநரஞ்
ஜகத்வம் சொன்னபடி. (2.) அசநசீல: என்பது இரண்டாவது பொருள். வயிறார
வுண்பவ னென்றபடி. வாயைக்கட்டி வயிற்றைக்கட்டிப் பணத்தைப் புதைத்து
வைப்பவனன்றிக்கே நன்றாகத்தின்று அநுபவிக்கை பெரும்பேறன்றோ. *போஜ்யம்
போஜந சக்திச் ச நால்பஸ்ய தபஸ: பலம்* என்பர்கள். நோயற்றவாழ்வே குறை
வற்ற செல்வமாக இருக்கப்பெற்றவனென்பதும் தேறும். இவ்விடத்தில் *அந்ந
வாந் அந்நாதோ பவதி* என்கிற ச்ருதி வாக்யம் விவரிக்கப்பட்டது. (3) அத்யந்
தம் ஆசு:—ஆசிஷ்ட: என்பது மூன்றாவது பொருள். காரியங்களில் அலஸனா
யிருக்கையன்றிக்கே சுருசுருப்போடு செய்பவனென்கை. இதற்குமேல் [த்ருடி
ஷ்டோ பலிஷ்ட:] மனோபலமும் தேஹபலமு முடையனா யிருக்கை. அவ்யவஸ்தித
சித்தனாயிருக்கை யன்றிக்கே ஒருவராலும் சலிப்பிக்க வொண்ணாத திடமான அத்ய
வஸாயமுடையனா யிருக்கையே மனோபலம். நாஸ்திகன் நாஸ்திகத்வத்தில் பிடி
வாதமாயிருக்கை முதலான விபரீத மனவுறுதிகளை இதற்கு அர்த்தமாகக் கொள்ள
லாகாது. இங்கு ஒரு விநோதக்கதை கேண்மின். பொடி போடுகிற இருவர் ஓரி
டத்தே சேர்ந்தார்கள். இருவரும் பொடி போடுகிறவர்களா யிருக்கச் செய்தேயும்,
ஒருவன் காசு கொடுத்து வாங்காமல் பிறரிடம் வாங்கியே போட்டுக்கொள்ளும்
வழக்க முடையவன். மற்றொருவன் காசு கொடுத்து வாங்கியே போட்டுக்கொள்
பவன், பிறர்க்கு ஒருசிட்டிக்கை பொடியும் கொடான். இவ்விருவரும் ஓரிடத்தில்
ஒன்று சேர்ந்து விட்டார்கள். பிறரிடம் வாங்கியே பொடிபோடுகிறவன் மற்றவ
னிடத்தில் எப்படியாவது பொடி வாங்கிவிடவேணுமென்று நினைத்து, 'ஐயரே! உம்
முடைய குமாரன் ஸப்ஜட்ஜியாமே; மாதம் 500 ரூ சம்பளமாமே என்று சொல்லிக்
கொண்டே ஸாபியாக ஒரு சிடிக்கை பொடி கொடும் என்றான். அதற்கு அவன்
'என் குமாரன் ஸப் ஜட்ஜியல்ல, ஹைகோர்ட் ஜட்ஜி. 500 ரூ. சம்பளமல்ல 3000 ரூ.
சம்பளம். பொடி கொடுக்கமுடியாது என்றான். பிறகு சற்றுநேரம் வேறு பேச்சுக்
கள் பேசிவிட்டு 'ஐயரே! உம்முடையமருமகப்பிள்ளை வியாபாரத்தில் நல்ல ஸம்
பாத்யமாமே; மாதம் 200, 300 லாபமாமே என்று சொல்லிக்கொண்டே ஸாபியாக
ஒரு சிடிக்கை பொடி கொடும் என்றான். அதற்கு அவன் 'மருமகப்பிள்ளையின்

வியாபாரம் இப்போது மிக ப்ரபலம். மாதம் இருபதினுயிரம் முப்பதினுயிரம் ஸம்பாத்யம். பொடி கொடுக்க முடியாது என்ருன். இக்கதையை இன்னமும் வளர்த்த வேணுமோ? திடமான வுறுதிக்குச் சொல்லுங் கதையிது. இதற்குமேல் [தஸ்யேயம் ப்ருதிவீ ஸர்வா வித்தஸ்ய பூர்ணு ஸ்யாத்] என்று செல்வச் சிறப்புடைமை சொல்லுகிறது. பூமண்டலம் முழுவதும் தனத்தால் நிறைந்து அவனுடைய ஸொத்தாயிருக்கை. ஆக இவ்வளவும் வாய்த்தால் ஒருவகையான மனுஷ்யானந்தமென்றது. இதில் கடைசியாகச்சொன்ன செல்வச் சிறப்பில் மட்டும் அதிவாதமுள்ளதே யன்றி மற்றவை பெரும்பாலும் ஸம்பாவிதமான ஆனந்தமே. இப்படிப்பட்ட ஆனந்தங்களைக் கருதியே ஆழ்வார் "உலகிலெண்ணிலாத பேரின்பமுற்று" என்றருளிச் செய்தாரென்னலாம்.

3. இதற்குமேல் கடைசியான உபந்யாஸம் பார்த்தன்பள்ளிச் செங்கண் மாலைப் பற்றியது. பெரிய திருமொழியில் (4-8) *கவளயானை கொம்பொசித்த பதிகம் பார்த்தன் பள்ளிப்பெருமாள் பாடல். இது தாமான தன்மையிலன்றிக்கே பெண்மையெய்தித் தாய் பாசுரமாகப் பாடியது. பாட்டுத்தோறும் *பார்த்தன் பள்ளி பாடுவாளே* என்று மகளின் செய்தியைத் தாய் சொல்லி முடிக்கிருள். *மாறன் பணித்த தமிழ்மறைக்கு மங்கையர் கோன், ஆறங்கங்கூற வவதரித்த* என்ற உபதேச ரத்தினமாலைப் பாசுரத்தின்படி நம்மாழ்வாருடைய நான்கு திவ்யப் பிரபந்தங்களும் நான்கு வேதமாய் திருமங்கை மன்னனுடைய ஆறு திவ்வியப் பிரபந்தங்களும் ஆறங்கங்களா யிருக்குமே. அதைச் சிறிது உபபாதிக்க இடம் தருகின்றது இப்பதிகம். ஸம்ஸ்கிருதத்தில் சீக்ஷா, வியாகரணம், ச்சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம். கல்பம் என்கிற ஆறும் நான்கு வேதங்களுக்கு அங்கமாக அமைந்தபடியை நாம் நன்கு தெரிந்து கொண்டிருக்கிறோம். ஸ்ரீரங்கராஜஸ்தவ-உத்தரசதகத்தில் பட்டர் *சீக்ஷாயாம் வர்ணசிக்ஷா பதஸமதிகமோ வ்யாக்ரியா நிர்வசோப்யாம்* இதியாதிச்லோகத்தினுல் உபபாதித்தருளி யிருக்கிருரன்ரோ. இங்ஙனே திருமங்கையாழ்வாருடைய திவ்வியப் பிரபந்தங்களாறுக்கும் நம்மாழ்வாருடைய நான்குக்குமுள்ள



திருநாங்கூரில் ஸஹ்ருதயஸமாஜம்.

அங்காங்கி பாவத்தை எளிதாகத் தெரிந்துகொள்ள முடியவில்லையே யென்று திகைப்பர் பலர். நம்மாழ்வாருடைய திவ்யப் பிரபந்தங்களிற் காணப்படுமவையும் மற்றையாழ்வார்களின் திவ்யப் பிரபந்தங்களிற் காணப்படாதவையுமான விலக்ஷண அநுபவ ப்ரகாரங்களைத் திருமங்கையாழ்வார் தம்முடைய திவ்யப் பிரபந்தங்களில் விஸ்தரித்து வெளியிட்டிருக்கையாலே இத்தைப்பற்ற அங்காங்கி பாவம் நிர்வஹிக்கப்படுகிறது. இதில் முக்கியமான நிரூபணம் கேளீர். * அநாதிநிதநா ஹ்யேஷாவாக் உத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா * என்கிறபடியே ஸம்ஸ்க்ருத வேதத்திற்கு ஆவர்த்தகனான பிரமன் நான்முகனாயிருப்பதுபோலத் தமிழ் வேதத்திற்கு ஆவர்த்தகரான நம்மாழ்வாரும் நான்கு முகங்களையுடையராயிருப்பர். எங்ஙனே யென்னில்; ஆழ்வார் தம்முடைய திருவாக்கினாலே பேசுவது மகள் பேச்சாலே பேசுவது, தாய்பேச்சாலே பேசுவது தோழி பேச்சாலே பேசுவது—என நான்கு ப்ரக்ரியைகளை நம்மாழ்வார் ஸ்ரீஸூக்திகளிலே காண்கிறோம். ஆழ்வார் ஆண்மை குலையாமல் குருகூர்ச் சடகோபனாகவேயிருந்து பேசுவது தம்முடைய திருவாக்கினாலே பேசினபடியாம். * அஞ்சிறையமடநாரை முதலான நான்கு பதிகங்களில் தூதுவிட்டதும், *வாயுந்திரையுகளும் முதலாக *வேய்மரு தோளிணையளவாகப் பதின்மூன்று பதிகங்களில் தம்முடைய கிலேசங்களை வெளியிட்டதும் மகள் பேச்சாலே பேசினபடியாம். * ஆடியாடியகங்கரைந்து முதல் * கங்குலும் பகலுங் கண்டுயிலறியாளளவும் ஏழுபதிகங்களில் 'என் மகள் வாடுகிறாள், மெலிகிறாள், பித்தேறிக்கிடக்கிறாள்' என்றாப்போலே சொன்னவை தாய் பேச்சாலே பேசினபடியாம். *தீர்ப்பாரையாமினி * துவளில் மாமணிமாட மோங்கு * கருமாணிக்க மலை * என்கிற மூன்று பதிகங்களில் (ஆழ்வாருடைய) அநந்யார்ஹத்வம் விளங்கும்படி பேசினவை தோழி வாக்காலே பேசினபடியாம். இப்படி நான்கு முகங்களாலே பேசின படியாலே நம்மாழ்வாரை நான்முகராகச் சொன்னது பொருந்தும்.

இங்ஙனே திருமங்கையாழ்வாரும் நான்முகராவர். இவரும் தாமான தன்மையிலே பல நூறு பாசுரங்கள் பேசினார். மகள் பேச்சாகப் பதினைந்து பதிகங்களுக்குமேல் பேசினார். தாய் பேச்சாக எட்டுப் பதிகங்கள் பேசினார். தோழி பேச்சாகப் பேசின பதிகம் இல்லையாயினும் தோழியோடு ஸம்வாதம் நடப்பதாக வைத்துப் பேசியிருப்பதனால் தோழி பாசுரம் அந்தர்வாஹினியென்று கொள்ளக் குறையில்லை. தாய் பேச்சான எட்டுப் பதிகங்களிலே பார்த்தன் பள்ளிப் பதிகம் மூன்றாவதாகும். திருவாய்மொழியில் * ஆடியாடியகங்கரைந்து * என்கிற தாய் பேச்சான பதிகத்தையொக்கும் *கவளயானை கொம்பொசித்த என்கிற இப்பதிகம். எம்பெருமானுடைய ஸ்வாமித்வத்திற்கு எதிராக நம்மிடம் ஸ்வத்வமிருப்பது போலவும், அவனுடைய சேஷித்வத்திற்கு எதிராக நம்மிடம் சேஷத்வமிருப்பது போலவும், அவனுடைய ஆத்மத்வத்திற்கு எதிராக நம்மிடம் சரீரத்வமிருப்பது போலவும், அவனுடைய புருஷோத்தமத்வத்திற்கு எதிராக நம்மிடத்தில் ஸ்த்ரீத்வமிருக்க ப்ராப்தமாகையாலே ஆழ்வார்க்குப் பெண்மை இயற்கையே யொழிய வந்தேறியன்று. ஆசார்யஹ்ருதயத்தில் "வித்யை தாயாகப் பெற்று" இத்யாதி சூர்ணையில் இது மிகவற்புதமாக விவரிக்கப்பட்டுள்ளது. இவ்வளவிலே ஸந்த்யா காலமும் திருமஞ்சன அவஸரமும் அணுகிவிட்ட படியால் உபந்யாஸம் நிறுத்தப்பட்டது.

# 3. தையில் மகத்திருநாள் உபந்யாஸம்.

தையமாவாஸ்யைக்கு முன்பு தையில் மகத்திருநாள் நடைபெற்றிருக்கின்றது. திருமழிசையாழ்வார் வைபவமறியாதாரில்லை. அவ்வாழ்வார் கச்சியில் வெஃகாவில் கணிகண்ணனென்னும் சிஷ்யனோடுகூட வாழ்ந்தருளுங் காலத்திலே பல்லவராஜனுடைய கொடுங்கோன்மையினால் கணிகண்ணனும் தாமும் வெளியேற நேர்ந்தபோது ஸ்ரீ யதோக்தகாரி யெம்பெருமானும் உடனெழுந்தருள நேர்ந்தது, பிறகு ஊரெல்லாம் இருள் மூடிப்போக அரசன் ஸபரிவாரனாய் ஓடிச் சென்று திருவடிகளிலே விழுந்து க்ஷமை வேண்டி மூவரையும் மீட்டு ஸ்தானத்திலே சேர்த்த இதிஹாஸம் (தையில் மகத்தன்று) நெடுங்காலமாக ஐதிஹ்யோத்ஸவமாய் நடத்தப்பட்டு வருகிறது. திருவெஃகா நாயனார் சேஷவாஹனத்திலமர்ந்து திருமழிசைப் பிரானோடுகூட ஸூர்யோதயத்தில் ஸந்நிதியை விட்டுப் புறப்பட்டுப் பாலாற்றங் கரையிலிருக்கும் ஓரிரவிருக்கை யென்னும் கிராமத்திற்கெழுந்தருளி, பாலாற்றுத் திருமண்டபத்திலே திருமஞ்சனம் கண்டருளி ஸேவை சாத்துமுறை கோஷ்டிகள் நடந்து மாலை ஆறு மணிக்கு ஸன்னிதி சேர்ந்தருள்வது இவ்வுத்ஸவத்தின் வைகரி. இந்த மஹோத்ஸவத்தைப் பத்து வருடங்களாக, ஸ்ரீ பகவத் பாகவதாசார்ய கைங்கர்ய துரந்தரரான ஸ்ரீமான் A. V. கன்னைய நாயுடு நானூறு ரூபா செலவில் அதிவிலக்ஷணமாக நடத்தி வருகிறார். பாலாற்றுத் திருமண்டபத்தில் சாத்துமுறை தொடங்குவதற்கு முன்னே உபந்யாஸம் நடைபெறுவது வெகு நாளாகவுண்டு. இவ்வருஷம் நடைபெற்றதற்கு விபர்யாஸோபந்யாஸம் என்று பெயரிட்டேன். பெயரைச் சிறிது விவரிக்கிறேன். கூரத்தாழ்வான் வரதராஜஸ்தவத்தில் "குணயத்தம் லோகே" என்கிற சுலோகத்தில் "விபர்யஸ்தம் ஹஸ்திக்ஷிதிதரபதே! தத் த்வயி புந:" என்று—தேவப் பெருமாளிடத்தில் ஒரு விஷயம் விபரீதமாய் விட்டதாக அருளிச் செய்தார். அங்ஙனேயான வைபரீத்யம் ஒரு விஷயத்திலன்று; அனேகவிஷயங்களிலுண்டு என்று பரக்க நிரூபித்தது இவ்வுபந்யாஸம். வேத வேதாந்தங்களில் எம்பெருமானுக்குப் பெருமையாகச் சொல்லப்பட்டு ஸித்தாந்தம் செய்யப்பட்ட மஹிமைகளெல்லாம் அவதாரங்களில் தலைகீழாகி விடுகின்றன வென்பதைக் காணுநின்றோம். அவனுக்கு முதன்மையான பெருமையாவது ஸகல ஜகத்காரணத்வம். சாரீரக மீமாம்ஸையும் * ஜந்மாத்யஸ்ய யத:* என்று தொடங்கிப் பலபல அதிகரணங்களினால் ஸர்வ காரணத்வத்தை அநந்யார்ஹமாக ஸ்தாபித்து வைத்தது. இப்படியிருக்க, தான் கார்ய பூதனாகவும்


A. V. கன்னைய நாயுடு, சென்னை.

தனக்கு வேறு சில காரண பூதர்களிருப்பதாகவுங் காட்டி அவதாரங்கள் செய்தருள்கின்றானெம்பெருமான். இவ்விஷயத்தைப் பேயாழ்வார் தமது திருவந்தாதியில் ஒருவிநோதமாக வருளிச் செய்கிறார்–*மகனொருவர்க்கல்லாத மாமேனி மாயன் மகனாம், அவன் மகன்றன் காதல் மகனைச் சிறை செய்த வாணன்...* என்கிற பாசுரம் காண்க. அனைவரும் தனக்குப் புத்ரபௌத்ராதிகளென்னும்படியாய் தான் ஒருவர்க்கும் மகனாகத் தகாதவனான எம்பெருமான் தானொருவர்க்கு மகனாக, அவனுக்குமொரு மகன் தோன்ற, அவனுக்குமொரு மகன் தோன்ற இப்படி ஸம்ஸாரம் வளர்ந்திட்டதென்று காட்டினார் பேயாழ்வார். க்ருஷ்ணாவதாரத்தில் தான் வஸுதேவ தேவகிகளுக்கு மகனானான். தனக்கொரு மகன் ப்ரத்யும்நனென்று தோன்றினான் அவனுக்கொரு மகன் அநிருத்தாழ்வானென்று தோன்றினான்; ஆக, காரணத்வமாகிற பெருமை கார்யத்வமாகிற சிறுமையாய் விபரீதமாயிற்று. இது வொரு விபர்யாஸம்.

அடுத்தபடி ரக்ஷகத்வத்தையெடுத்துக் கொள்வோம். தனக்கொரு ரக்ஷகனின்றிக்கே தானே ஸர்வரக்ஷகனாக ஓதப்பட்டவன் ரக்ஷகத்வம் போய் ரக்ஷ்யத்வத்தை யடைகிறான். யசோதைப் பிராட்டி சொல்லுகிறாள்—* போய்ப்பாடுடைய நின் தந்தையும் தாழ்த்தான் பொருதிறல் கஞ்சன் கடியன், காப்பாருமில்லை கடல்வண்ணா வுன்னை* என்கிறாள். *கண்ணாவென் கார்முகிலே கடல்வண்ணா காவலனே முலையுணாயே* என்று காக்குமியல்வினன் கண்ண பெருமானென்றறிந்து சொல்லச் செய்தேயும் 'கண்ணா! தனியே போய் எங்கும் திரிகிறாயே; உன்னைக் காப்பாருமில்லையே!' என்னா நின்றாள். ஸர்வரக்ஷகனுக்கும் ரக்ஷையிட வேண்டும்படியாகிறதன்றோ. ஸ்ரீவசனபூஷணத்தில் "மங்களாசாஸனம் ஸ்வரூபவிருத்த மன்றோ வென்று சங்கித்துக் கொண்டு "ஜ்ஞானதசையில் ரக்ஷ்யரக்ஷகபாவம் தன் கப்பிலே கிடக்கும், ப்ரேமதசையில் தட்டு மாறிக் கிடக்கும்" என்றன்றோ சங்காபரிஹாரம் செய்தருளிற்று. ரக்ஷகனான தன்னைத் தானே யன்றோ ரக்ஷ்யனாக்கிக் கொள்ளுகிறான். இல்லையாகில் பல்லாண்டு பாடுவதை உகந்து கேட்டருள்வனோ?

இனி சேஷித்வத்தை யெடுத்துக் கொள்வோம். கைங்கரியம் செய்யப் பிறந்தவன் சேஷனென்றும், கைங்கரியம் கொள்ளப் பிறந்தவன் சேஷி யென்றும் சொல்லப்படுவான்; *உன்றன்னோடுற்றோமே யாவோம் உனக்கே நாமாட்செய்வோம்* என்றும், *ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்ய வேண்டும் நாம்* என்றும் ஞானிகள் நித்ய கைங்கரியம் செய்யப் பாரிக்கும்படி ஸர்வசேஷியாயுள்ளவன் *இமௌ ஸ்ம முநிசார்தூல! கங்கரௌ ஸமுபஸ்திதௌ, ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை சாஸநம் கரவாவ கிம்* என்று விச்வாமித்ரர் போல்வார் பக்கலிலே கிங்கரவ்ருத்தி செய்யக் குதூஹலித்திருந்தானென்றால் இந்த விபர்யாஸத்தை என்ன சொல்லுவது......இங்ஙனே மற்றுஞ்சில விஷயங்களையும் விஜ்ஞாபித்து. முடிவாக ஸர்வநியாமகத்வ மெடுத்துக் கொள்ளப்பட்டது. *அந்த: ப்ரவிஷ்டச் சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா* என்று சுருதியோதினபடியே தான் ஸர்வநியாமகனென்று ப்ரஸித்தி பெற்றிருக்கச் செய்தேயும் தனக்கும் சிலரை நியாமகராகவுடையனாய் தான் நியாம்யனா யிருக்கும்படியைத் திருமழிசைப்பிரான் சரிதையிலே கண்டோம். "கணிகண்ணன் போகின்றான்

காமருபூங்கச்சி மணிவண்ணா நீ கிடக்க வேண்டா, துணிவுடைய செந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன், பைந்நாகப் பாய் சுருட்டிக்கொள்* என்றபோது தனது பைந்தாகப் பாயைச் சுருட்டிக்கொண்டு புறப்படுவதும், *கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங்கச்சி மணிவண்ணா! நீ கிடக்க வேண்டும்–துணிவுடைய செந்நாப்புலவனும் மீள்கின்றேன் நீயுமுன்றன் பைந்நாகப் பாய்விரித்துக்கொள்* என்றபோது மீண்டருளி யதாஸ்தானம் சயனித்துக் கொள்வதுமான சரிதையினால் தன்னுடைய நியாமகத்வ ப்ரதிபடமான நியாம்யத்வத்தை யன்றோ நிலைநிறுத்திக் கொண்டான். கூரத்தாழ்வான் வரதராஜஸ்தவத்திலே *அநந்யாதீநத்வம் தவ கில ஜகுர் வைதிககிர: பராதீநம் த்வாம் து ப்ரணதபரதந்த்ரம் மநுமஹே* என்கிற சுலோகத்தில் முக்கியமாக இந்தச் சரிதையை யன்றோ திருவுள்ளம்பற்றினர். பட்டரும் ஸஹஸ்ரநாமத்திலே *விஜிதாத்மாவிதேயாத்மா* என்ற விடத்திலே பிறரைப்போலே ‘அவிதேயாத்மா’ என்று பதவிபாகம் பண்ணாமல் ‘விதேயாத்மா’ என்றே எடுத்து பாஷ்யமிட்டருளினது இது போன்ற பல சரிதைகளைக் கொண்டே யன்றோ. கீதையில் *ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்* என்றதில் அவன் தானும் இலச்சினையிட்டு வைத்தது இதுவே யாயிற்று. .... (3)

தையில்மகத்திருநாளுபந்யாஸம் முற்றுப்பெற்றது.

---

## 4. சென்னை க்ருஷ்ணன் ஸன்னிதியுபந்யாஸர்.

தையில் மகத்திற்கு முந்தின வாரத்தில் சென்னைபுரி முத்தியால்பேட்டை ஸ்ரீக்ருஷ்ணன் ஸன்னிதியில் வெகு சிறப்பாக நடைபெற்ற ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவமொன்றில் சிறியதோருபந்யாஸம் நிகழ்த்த நேர்ந்தது. விஷயம் யஜ்ஞப்ரபாவ மென்பது. அப்போது அங்கே ஸன்னிதி முழுதும் யஜ்ஞமயமாகவே யிருந்தபடியாலும் அந்த யஜ்ஞ ப்ரக்ரியைகள் அதிமாத்ரம் தர்சநீயங்களா யிருந்தபடியாலும் யஜ்ஞப்ரபாவத்தைப் பற்றியுபந்யஸிக்க பகவந்நியமனமாயிற்று. வேதத்தில் *யஜ்ஞோ வை விஷ்ணு:* என்றும் *விஷ்ணுர் வை யஜ்ஞ:* என்றும் அடிக்கடி ஓதப்படுவதாலும், ஆழ்வார்களும் எம்பெருமானை வேள்வியோடு ஸமாநாதிகரித்து [வேள்வியை] என்றும் [வேள்வியாய்] என்றும் பலவிடங்களிலருளிச் செய்கையாலும் “யஜ்ஞேந யஜ்ஞமயஜந்த தேவா: தாநி தர்மாணி ப்ரதமாந்யாஸந், தேஹ நாகம் மஹிமாநஸ் ஸசந்தே. யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:” என்று ப்ராஹ்மண கோஷ்டிகளில் ஸுப்ரஸித்தமான ஒரு ருக்கை விவரித்துரைத்தேன்.

இவ்வுபந்யாஸத்திற்கு மங்களா சரணமாக “சதுர்ப்பிச்ச சதுர்ப்பிச்ச த்வாப்யாம் பஞ்சபிரேவ ச, ஹூயதே ச புநர் த்வாப்யாம் ஸ நோ விஷ்ணு: ப்ரஸீதது.” என்று வைதிகோத்தமர்களின் கோஷ்டிகளில் மட்டும் ப்ரஸித்தமான வொரு சுலோகத்தை யுரைசெய்தேன். (அது வருமாறு;) யஜுர்வேதம் முதற்காண்டம் ஆருவது ப்ரச்நத்தில் “யோ வை ஸப்ததசம் ப்ரஜாபதிம் யஜ்ஞ மந்வாயத்தம் வேத” என்று தொடங்கு மநுவாகத்தில் “ஆச்ராவயேதி சதுரக்ஷரம், அஸ்து ச்ரௌஷடிதி சதுரக்ஷரம், யஜேதி த்வ்யக்ஷரம், யேயஜாமஹ இதி பஞ்சாக்ஷரம். த்வ்யக்ஷரோ வஷட்கார: ஏஷ வை ஸப்த தச: ப்ரஜாபதிர் யஜ்ஞமந்வாயத்த:”

என்றோதி யிருப்பது கொண்டு இந்த ச்லோக மவதரித்தது. சுலோகத்தில் நான்கு, நான்கு, இரண்டு, ஐந்து, (மறுபடியும்) இரண்டு—என்று (பதினேழு அக்ஷரங்கள் தேறும்படியாக) எடுத்துரைத்துள்ளது. இவ்வைந்து வார்த்தைகளும் யஜ்ஞந்தோறும் தொடர்ந்துவரும். இவற்றால் [ய: விஷ்ணு: ஹூயதே, ஸ:ந: ஆஸீதது] என்று சொல்லி யிருக்கையாலே ஸகல யஜ்ஞங்களும் விஷ்ணுவுக்கே ஆராதந ரூபமானவை யென்பது தேறும். யஜ்ஞங்களில் "இந்த்ராய ஸ்வாஹா, ஸோமாய ஸ்வாஹா ....." இத்யாதியாக தேவதாந்தரங்களுக்கு ஹவனமிருந்தாலும் *ஸ ஆத்மா. அங்காந்யந்யா தேவதா:* என்று உபநிஷத்து ஓதின கட்டளையிலே அவ்வோ தேவதைகளுக்கு இடப்படுமவை அவயவபூதர்களுக்கு இடுமதாகவே தேறி நிற்கும். இதை நம்மாழ்வார் *இறுக்குமிறை யிறுத்துண்ண எவ்வுலகுக்கும் தன்மூர்த்தி நிறுத்தினான் தெய்வங்களாக அத்தெய்வ நாயகன் தானே* என்கிற பாசுரத்தாலும், திருமழிசைப்பிரான் *உகைக்குமேல் எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும், அப்போதொழியு மழைப்பு* என்கிற பாசுரத்தாலும் நிலைநாட்டி வைத்தனர். கீதாசார்யனும் *யே த்வந்ய தேவதாபக்தா யஜந்தே ச்ரத்தயாந்விதா:, தேபி மாமேவ கௌந்தேய! யஜந்த்ய விதி பூர்வகம்* என்றோதி வைத்தான். அங்கு ஸ்வாமி பாஷ்யத்தில் விளக்கம் காணத்தக்கது. இவ்வர்த்தத்தையே *யஜ்ஞேந யஜ்ஞமயஜந்த தேவா:* என்று ஆக்ருதம் எடுத்துக் கொண்ட ருக்கும் விளக்கிக் காட்டுவதனால் இதை இந்த யஜ்ஞ கோஷ்டியிலே விவரிக்கிறேன்.

மூன்றாவது காண்டத்தின் முடிவான ருக்கு இது [யஜ்ஞேந யஜ்ஞம் அயஜந்த.] யஜ்ஞத்தாலே யஜ்ஞத்தை ஆராதித்தார்கள் என்று பொருளாகிறது. முதல் யஜ்ஞபதத்திற்கு ஆராதன ரூபமான க்ரியை அர்த்தம். அடுத்த யஜ்ஞபதத்திற்கு ஆராத்யனை விஷ்ணு அர்த்தம். வேள்வியைக் கொண்டு விஷ்ணுவை ஆராதித்தார்களென்றபடி. *யஜா-தேவபூஜாயாம்* என்று தாதுபாடமாகையாலே பகவதாராதன ரூபமான காரியமெல்லாம் யஜ்ஞசப்தவாச்யமேயாகும். 'யஜ்ஞேந' என்பது ஜாத்யேக வசனமாய்க்கொண்டு ஆராதன ரூபங்களான க்ரியா கலாபங்களெல்லாவற்றையுஞ் சொல்லும். *ஆகாசாத் பதிதம் தோயம்* என்ற கணக்கிலே ஸகல தேவதாராதனமும் விஷ்ணுவாராதனத்திலே பர்யவஸித்து நிற்குமென்றறிக. *வர்ணாச்ரமா சாரவதா புருஷேண பர: புமாந், விஷ்ணுராராத்யதே பந்தா நாந்யஸ் தத்தோஷகாரக:* என்கிற ப்ரமாணத்தை பட்டர் (ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில்) எடுத்துக்காட்டி யிருக்கையாலே நாம் செய்து போருகிற சாஸ்த்ரீயங்களான வர்ணாச்ரமாசாரங்களெல்லாம் யஜ்ஞங்களே யென்றும் இவற்றால் ப்ரீதியடைபவன் மஹாவிஷ்ணுவே யென்றும் கருத்து தேறிற்றாகும். "யஜ்ஞேந யஜ்ஞமயஜந்த" என்றதை நன்கு நினைப்பூட்டும் திருநெடுந்தாண்டகத்தில் (4) *மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும் வாழுதியேல் வாழலாம்* என்கிற ஸ்ரீஸூக்தி. *யஜ்ஞம் யஜ்ஞேந போலே *மந்திரத்தை மந்திரத்தால்* என்கிறது. மந்திரத்தை—திருமந்த்ர ஆதிபாத்யனை ஸ்ரீமந் நாராயணனை; மந்திரத்தால்—திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தினால் என்றபடி. உபய வேதங்களிலும் ஸமசீலமான ஆயோமமுண்டென்று காட்டினபடி. [தேவா:] என்றது—நிலத்தேவர்களான

அந்தணர்களை. இவர்கள் ஸத்கர்மாநுஷ்டானங்களாலே பகவானை ஆராதித்தார்களென்றதாயிற்று. இதன் சிறப்பைச் சொல்லுகிறதுமேல். [தாநி தர்மாணி ப்ரதமாந்யாஸந்.] என்று. தர்மாணி யென்றது கர்மாணி யென்றபடி. கீழ்ச் சொன்ன பகவதாராதன ரூபங்களான கருமங்கள் மிகச் சிறந்தவை என்றதாயிற்று. இங்கே பட்ட பாஸ்கரர் தமது பாஷ்யத்தில் எழுதுகிறார்—ஹிம்ஸை யில்லாமையினாலே சிறந்தவை யென்று. வேதோக்தங்களான காம்யயஜ்ஞங்களில் பசுவிஶஸநமாகிய ஹிம்ஸையுண்டன்றோ; அது இந்த யஜ்ஞத்தில் இல்லையென்று இதன் சிறப்பைக் காட்டினாராயிற்று. இனி இந்த யஜ்ஞபலனைச் சொல்லுகிறது [தேஹ நாக மித்யாதியால். தே, ஹ, என்று பதவிபாகம். [பூர்வே ஸாத்யா: யத்ர ஸந்தி, தம் நாகம் தே மஹிமாந: ஸசந்தே] மஹிமசாலிந: என்னுமர்த்தத்திலே மஹிமாந: என்று ஆயோஶம். பூர்வார்த்தத்தில் ‘யஜ்ஞம்அயஜந்த’ என்னப்பட்ட அந்த மஹாத்மாக்கள் [நாகம் ஸசந்தே] நலமந்தமில்லதோர் நாட்டை யடைகிறார்கள். ஐந்தாவது காண்டம் மூன்றாவது ஆச்நத்தில் நாகஶப்த நிர்வசனமுள்ளது—* நாஸ்மா அகம் பவதி * என்றது; துக்கமில்லாத இடம் நாகம், அதுதான் நலமந்தமில்லதோர் நாடு. அது நித்ய முக்தர்களுக்கு இருப்பிடமானதென்கிறது [யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:] என்பதனால். ஸாத்யா:-பலாநுபவ நிஷ்ணாதா: என்று பாஷ்யம். *ஓம் சாந்திச் சாந்திச் சாந்தி:. .... .... (4)

சென்னை க்ருஷ்ணன் ஸன்னிதியுபந்யாஸம் முற்றிற்று.

---

## 5. மார்கழித் திங்களுபந்யாஸ விவரணம்.

தைமாதத்திற்குக் கீழதான மார்கழித்திங்களில் முப்பதும் தப்பாமே நடைபெற்ற உபந்யாஸங்கள் உலகமுணர்ந்தவையாதலால் அதைப்பற்றி இங்கு விவரியாது விடுகின்றேன். இதில் ஒரு விசேஷ நிகழ்ச்சியைமட்டும் ஈண்டு விஜ்ஞாபிக்க விரும்புகிறேன். சென்னைத் தொண்டைமண்டலம்ஸ்கூல் ஹாலில் (1931-ல்) உபந்யாஸம் தொடங்கின நாள்முதலாக மார்கழிதோறும் கடைசி ஞாயிற்றுக் கிழமையன்று அரையர்ஸேவை யநுகாரம் நடத்தி வருகிறேனென்பதை அறியாதாரில்லை. கோயில், ஸ்ரீ வில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி முதலிய சில திவ்ய தேசங்களில் மட்டுமே இப்போது அரையர் ஸேவை என்கிற க்ரமம் நடைபெற்று வருகின்றதென்பது ப்ரஸித்தமான விஷயம். அவர்கள் தங்களுக்குரிய சிரோபூஷணமொன்று [குல்லாய்] அணிந்துகொண்டு கையில் தாளமுங்கொண்டு தேவகானத்தில் திவ்யப்ரபந்தப் பாசுரங்களை ஸேவிப்பர்கள். வழக்கமாகச் சில பாசுரங்களுக்கு வியாக்கியானம் ஸேவிப்பதோடு அபிநயிப்பதுமுண்டு. இது மார்கழி மாதத்தில் பகற்பத்து இராப்பத்து என்னப்படுகிற திருவத்யயநோத்ஸவத்தில் வெகு விசேஷமாக நடைபெற்று வருவதாம். ஸ்ரீமந் நாதமுனிகள் காலந் தொடங்கி இது நடந்துவருவதாக ஸம்ப்ரதாயம். முதன் முதலாக அடியேன் ஸ்ரீ ரங்கம் விடைகொண்டிருந்தபோது அங்குத் திருவத்யயநோத்ஸவத்தில் இந்த அரையர் ஸேவையிலே யீடுபட்டு, அந்தோ ! அரையர் திருவம்சத்தில் ஜனிக்கப் பெறாமல் போனேனே! என்று மிக வருந்தினதுண்டு. யாரேனுமொரு அரையர்



நம்மை ஸ்வீகாரம் செய்து கொள்வரா? என்றும் விசாரித்துப் பார்த்ததுண்டு. உள்ளத்தில் மிகப் பெரிதாக இருந்த இக்குறையை எம்பெருமான் ஒருவாறு தீர்த்தருளினது என்னுள்ளமொன்றையே ஸாக்ஷியாகக்கொண்ட ஸந்தோஷமாகும். சென்னைமா நகர்க் காலக்ஷேப ஸபையில் மார்கழி மாதந்தோறும் ஒருநாள் இந்த அரையர் ஸேவை நடத்தப்பட்டு வருகின்றது. அரையர்களின் அநுகாரம் பரிபூரணமாக நடந்து வருகின்றது. மார்கழி பிறந்தவுடனேயே 'அரையர் ஸேவை என்றைக்கு? அரையர் ஸேவை என்றைக்கு? என்று பக்த வர்க்கங்கள் வெகுகுதூஹலமாகக் கேட்டுக்கொண்டு அந்நாளை எதிர்பார்த்திருந்து மிகப்பெருந்திரளாக வந்து கூடியநுபவிப்பது நாளைக்கும் வழக்கமாயிருந்து வருகிறது. அன்று அடியேன் அரையர் கோலங்கொண்டே காட்சி தருவேன். அக்கோலத்தை இங்குங்காணலாம்.

1931-ஆம் ஆண்டிலிருந்து இடையறுது தொடர்ச்சியாக நடைபெற்று வந்த இந்த அரையர் ஸேவை அடியேனுடைய அசக்தியின் கனத்தினல் சென்ற வருஷத்திலும் அதற்கு முந்திய வருஷத்திலும் நடத்த முடியாமல் நிறுத்தப்பட்டிருந்தது. இதில் பலபக்தமணிகளின் மனக்குறையை நீக்க வேண்டி நேற்றைய மார்கழியில் ஒருவாறு நடத்தப்பட்டது. அபிநயத்தை நடத்த உடல்நிலை இடம் தாராமையால்



அதைமட்டும் நிறுத்திக்கொண்டு, கொண்டாட்டங்கள் ஸேவிப்பது, வியாக்கியானம் ஸேவிப்பது மூலம் ஸேவிப்பது ஆகிய இவற்றை மட்டும் நான்கு நாழிகையளவில் நடத்தலாயிற்று. இங்ஙனேயொரு நிகழ்ச்சி நேரப் போகிறதென்று நெஞ்சாலும் நினையாதிருந்த காலத்தில் [இருபது வயதுக்குட்பட்ட இளம் பிராயத்தில்] கோயில் பெரிய அரையர்ஸ்வாமி யிடமிருந்தும் ஸ்ரீவில்லிபுத்தூர் பெரிய அரையர் ஸ்வாமி யிடமிருந்தும் ஸங்க்ரஹித்துக் கொண்டவை பழுதாகாமே பயன்பட்டன வென்று மகிழா நின்றேன். ... ... (5)

---

## 6. கார்த்திகைத் திங்களுபந்யாஸ விவரணம்

மார்கழிக்குக் கீழதான கார்த்திகை மாதத்தில் முதலிலேயே (மூன்ருவது தேதியிலேயே) நம்பிள்ளை யுத்ஸவத் தொடக்கமானபடியால் இவ்வுத்ஸவம் பத்து நாட்களிலும் உபந்யாஸங்கள் நடைபெற்றன. நம்பிள்ளை சாத்துமுறைக்கு முதல் நாள் (பரணீ நக்ஷத்திரத்தில் அருளாளப்பெருமாளெம்பெருமானர் திருவவதாரமாதலால் அவரருளிச்செய்த ஞானஸாரத்தை நித்தியமும் உபந்யஸித்துத் தலைக்கட்டவேணுமென்று ஆரம்பிக்கப்பட்டது; ஒன்பது நாட்களில் ஒன்பது பாசுரங்களே உபந்யஸிக்க முடிந்தது. திருக்கார்த்திகை யன்று நம்பிள்ளை வைபவமும் திருமங்கைமன்னன் வைபவமும் சேர்த்து உபந்யஸிக்கப்பட்டது. அருளாளப்பெருமாளெம்பெருமானர் சாத்துமறை ஸ்ரீ பாண்டவதூதர் ஸன்னிதியாகிய திருப்பாடகத்தில் அவருடைய திருவம்சஸ்தர்களால் சிறப்பாகக் கொண்டாடப்பட்டுவருவதால் அவ்விடத்தில் பெரியார்களின் நியமனத்தினல் அருளாளப்பெருமாளெம்பெருமானர் வைபவச் சுருக்கமும் ஞானஸாரத்தில் *அற்ற முரைக்கிலடைந்தவர்பால் அம்புயைகோன்* என்கிற பாசுரத்தின் விசேஷார்த்தமும் உபந்யஸிக்கப்பட்டது. அருளாளப்பெருமாளெம்பெருமானர் வைபவத்தைப் பலர் தெரிந்துகொள்ள விரும்புவர்களாதலால் அதனை இங்கு ஸம்க்ஷேபிக்கிறேன்.

## அருளாளப் பெருமாளெம்பெருமானர் வைபவம்.

யஜ்ஞமூர்த்தி யென்னுமொரு மாயாவாதி ஸந்ந்யாஸி எம்பெருமானருடைய வைபவங்களைக்கேட்டு அவரோடே தர்க்கித்து வெற்றிபெறவேணுமென்று விரும்பிக் கோயிலிலே ஸ்வாமி மடத்திலே வந்து ஸேவித்து ‘நான் கேட்கிற கேள்விகளுக்கெல்லாம் நீர் விடை கூறவேணும்; த்ருப்திகரமாக விடைபெற்றேனாகில் உமக்கு சிஷ்யனாகக் கடவேன்’ என்று சொல்ல, ஸ்வாமியும் இசைந்

தருள, பதினேழு நாள் வரையில் வெற்றி தோல்வியின்றியே வினவிடை செல்லா நிற்க, முடிவில் உத்தரமருளிச் செய்யவேண்டிய பொறுப்பு ஸ்வாமி பக்கலிலே வந்து நின்று மேல்விஷயம் தோன்ருமேயிருக்கையில் 'நாளைக்கு ஆகிறது' என்று சொல்லி ஸபாவிஸர்ஜநமாயிற்று. பிறகு ஸ்வாமியின் திருவுள்ளம் மிகவும் வியா குலப்பட்டு தம் திருவாராதனமான பேரருளாளரைத் திருவடி விளக்கி அமுது செய்யப்பண்ணி 'ஆழ்வார் தொடங்கி ஆளவந்தாரளவாக இத்தனை காலம் ஒரு குறையுமின்றியே விளங்கிவந்த இந்த தரிசனம் இன்று அடியேனல் பங்கமடையக் கடவதோ? இப்படியும் ஒரு லீலை கொண்டாடத் திருவுள்ளமாயிற்ரூே?' என்று விண்ணப்பஞ்செய்து தாம் அமுது செய்யாமலே கண் வளர்ந்தருள, அன்றிரவு பேரருளாளர் கனவிலே யெழுந்தருளிக் காட்சி தந்து மாயாவாதியின் வாயடங் கும்படியான சில அர்த்த விசேஷங்களை ஸ்புரிக்கச் செய்து மறைய, ஸ்வாமியும் சிற்றஞ்சிறு காலையெழுந்து பரமஸந்துஷ்டராய் நித்யாநுஷ்டானங்களை முடித்துக் கொண்டு ப்ரஸந்நகம்பீரராய் விசாரகோஷ்டிக்கு எழுந்தருள, அவ்வளவிலேயே யஜ்ஞமூர்த்தி இன்று நமக்குத் தோல்வியே திண்ணமென்று நிச்சயித்து அப்போதே யெழுந்து ஸ்வாமி திருவடிகளிலே ஸாஷ்டாங்கப்ரணமம் பண்ணி நின்று 'அடியேனை அங்கீகரித்தருளவேணும்' என்று கைகூப்பி ப்ரார்த்திக்க, 'மேலே விஷய விசாரம் நடைபெறவேண்டியிருக்க இதுவென்?' என்று ஸ்வாமி கேட்க; அதற்கு யஜ்ஞமூர்த்தி 'ஸ்வாமிந்! தேவரீருக்குப் பெரிய பெருமாள் ப்ரத்யக்ஷமான பின்பு தேவரீரென்றும் பெருமாளென்றும் வாசியுண்டோ? இனி அடியேன் தேவரீர் ஸந்நிதியில் வாய்திறந்து ஒரு வார்த்தை சொல்ல ப்ராப்தி யில்லை; இந்த ஆத்மா இதுவரையில் அநர்த்தப்பட்டதுபோதும்; இனியும் அநர்த்தப்படாதபடி நோக்கியருளவேணும், என்று கனக்க ப்ரார்த்தித்து ஸ்வாமி யின் இசைவும் பெற்று அப்போதே ஏகதண்டத்தை முறித்தெறிந்து ப்ராயச்சித்த பூர்வகமாய் சிகாயஜ்ஞோபவீதங்களையும் பஞ்சஸம்ஸ்காரங்களையும் பெற்று முக்கோல்பிடித்த முனியாகி சாஸ்த்ரப்படி ஆசார்யனுடைய நாமத்தையே வஹிக்க விரும்பி ப்ரார்த்திக்க, ஸ்வாமியும் பேரருளாளனுடைய ப்ரஸாதமடியாகவே இவர் ஆட்பட்டாரென்கிற உபகார ஸ்ம்ருதி உலகப்ரஸித்தமாம்படி அருளாளப் பெருமா ளெம்பெருமானர் என்று திருநாமம் சாத்தியருளினர். உடனே அவரை யழைத் துக்கொண்டு போய்ப் பெரிய பெருமாளை ஸேவிக்கப்பண்ணிச் சிறப்புகளு பறு வித்து, அன்று முதலாகவே திருப்பல்லாண்டு தொடங்கி நாலாயிரமும் ஓதுவித்து, மற்றும் தத்வசிக்ஷைகளும் செய்வித்தருளினர்.

அக்காலத்திலே, அனந்தாழ்வான் எச்சான் தொண்டனூர் நம்பி மருதூர் நம்பி என்னுமிவர்கள் எம்பெருமானர் திருவடிகளிலே ஆச்ரயிக்க வேணுமென்று வர, ஸ்வாமி அவர்களை அருளாளப் பெருமாளெம்பெருமானர் திருவடிகளிலே ஆச்ரயிப்பித்தருளினர். அப்போது அவர் அஞ்சி நடுங்கி அவ்வடியார்களை நோக்கி "குருவியின் கழுத்திலே பனங்காயைக் கட்டினப்போலே ஸ்வாமி செய் தருளினராகிலும். நீங்கள் ஸ்வாமி திருவடிகளே சரண மென்றிருங்கள்" என்று நியமித்தார். இவ்விதிஹாஸத்தினல் யஜ்ஞமூர்த்தி யென்கிறவவர் மிகச்சிறந்த வாவதூகர் என்பது விளங்கும். பரமதத்தினின்று திருத்திப்பணி கொள்ளப்பட்ட

வரைப் பரம்பரா ஸ்ரீவைஷ்ணவர்கள் உபேக்ஷித்து விடாமைக்காகவே ஸதுபாயஜ்ஞான ஸ்வாமி யெம்பெருமானர் திருமலையனந்தாழ்வான் முதலானரை அவர் பக்கலிலே ஆச்ரயிக்கச் செய்தருளினது. ஆழ்வான் திருக்குமாரர்களான பட்டரையும் சீராமப்பிள்ளையையும் எம்பார் திருவடிகளிலே ஆச்ரயிப்பித்ததையும் இங்கு நினைப்பது. இந்த வழியைப் பின்பற்றியே பட்டரும்தாம் திருத்திப் பணி கொண்ட நஞ்சீயர் பக்கலிலே நம்பிள்ளையை ஆச்ரயிக்கச் செய்தருளினர். இத்தகைய ஹ்ருதயவைசால்யம் இக்காலத்தவர்களிடத்துக் காணவரிதன்றே. ... ( )

---

## 7. பெரிய காஞ்சியிலுபந்யாஸம்

பெரிய காஞ்சீபுரம் ராஜவீதியில் யஜுர்வேத பாடசாலையில் கார்த்திகை மாதந்தோறும் யாஜ்ஞவல்கிய ஜயந்தி நடைபெற்று வருகின்றதல்லவா; வருஷந்தோறும் அதில் நம்முடைய உபந்யாஸமுமுண்டு. இவ்வருஷம் ஜயந்தீ ஸமாப்தி தினத்தில் வேதத்தின் வைபவத்தைப்பற்றிச் செய்த உபந்யாஸம் வருமாறு:—

### வேதப்ரபாவோபந்யாஸம்.

ஸாரங்களும் அஸாரங்களும் கலந்த கட்டியாயிருக்குமிந் நிலவுலகில் அஸாரங்களையும் அற்ப சாரங்களையும் தள்ளி ஸாரங்களைக் கொள்வோமாயின், அவை பிரமாணங்களின் திரள், பிரமேயங்களின் திரள், ப்ரமாதாக்களின் திரள் — என மூன்று வகுப்புகளிலடங்கும். யதார்த்தமான ஞானத்தைப் பிறப்பிக்கும் சாஸ்த்ரங்கள் ப்ரமாணமெனப்படும். அந்த சாஸ்த்ரங்களினின்று, தேறுகின்ற அர்த்த விசேஷங்கள் ப்ரமேய மெனப்படும். மேற்சொன்ன அர்த்த விசேஷங்களைக் கண்டறிந்து உபகரிக்கவல்ல மாஞானிகள் ப்ரமாதாக்களெனப்படுவர்கள். இவற்றுள் பிரமாணங்கள் அளவுகடந்தவை. எம்பெருமான் அத்வாரகமாகவும் ஸத்வாரகமாகவும் வெளியிட்டருளியுள்ள சாஸ்த்ரங்கள் எல்லையில்லாதவை. ப்ரமேயங்களான அர்த்த விசேஷங்கள் பிரமாணங்களிற் காட்டிலும் அதிகமான கணக்கில் தேறும். ஏனென்றல் மூலம் சுருங்கியிருக்கும்; அர்த்தம் பெருகியிருக்கும் என்பதனல். ப்ரமாதாக்களின் ஸங்கியை குறைவாகவே யிருக்கும். இறந்த காலத்திற் சென்றவர்கள், நிகழ் காலத்தில் விளங்குமவர்கள், எதிர்காலத்தில் தோன்றப் போகின்றவர்கள் ஆக முக்காலத்திலுள்ளாரையும் கூட்டிக் கொண்டாலும் யதார்த்த ஞானமுடையவர்களாய்ப் பிரவசனம் செய்யவல்ல ப்ரமாதாக்கள் மிகக் குறைவாகவன்றே தேறுவர்கள். அதைப்பற்றி யென்ன? ஆக ப்ரமாண ப்ரமேய ப்ரமாத்ருவர்க்கங்கள் மூன்றே அஸார அல்பஸார பூயிஷ்டமான இந்த ஜகத்தில் ஸாரமெனத்தகும். இவை உலகில் நிலவுவதனல்தான் பலவகைப்பட்ட க்ஷோபங்களிடையே நாம் க்ஷேமத்தையும் அநுபவித்து வருகிறோம்.

மேலே விவரித்த மூன்று வர்க்கங்களில் ப்ரமாண வர்க்கந்தான் வலிது. ஏனென்றல், அஃது இல்லாதபோது ப்ரமேயவர்க்கமும் ப்ரமாத்ருவர்க்கமும் தேற மாட்டாதன்றே. ப்ரமாணமான மூலம் இருக்கவேயன்றே ப்ரமேயங்களான

அர்த்தங்களும் அவற்றை யுணர்ந்து உணர்த்தும் ப்ரமாதாக்களும் தோன்ற நேர்ந்தது. ஆதலால் ப்ரமாண வர்க்கமே மிகச் சிறந்தது. ப்ரமாணங்கள் பல வகுப்பா யிருந்தாலும் *ஆதௌ வேதா: ப்ரமாணம்* என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தி யின்படி வேதமே தலை சிறந்த ப்ரமாணமாகும். வேதத்தை யுபஜீவித்தே மற்ற ப்ரமாணங்கள் தோன்றின; ஆகவே வேதம் ஸ்வத: ப்ரமாணமென்றும், மற்றவை பரத: ப்ரமாணமென்றும் கொள்ளப்படுகின்றது. பஞ்சராத்ரமும் வேதமும் துல்ய ப்ரமாணமென்றும், மற்ற இதிஹாஸ புராணாதிகள் வேத விரோதம் காணாத விடங்களில் ப்ரமாணமென்றும் மேலையார்களின் கொள்கை.

வேதத்தின் மஹிமை முக்கியமாக நான்கு விஷயங்களைப் பொறுத்தது. 1. நித்யத்வம், 2. அபௌருஷேயத்வம், 3. அவிச்சித்ந பரம்பரா ப்ராப்தத்வம், 4. அநந்தத்வம் என்பவையாம் அவை. இவை நான்கையும் விவரிக்கின்றேன். முன்னம் நித்யத்வ நிரூபணமாகிறது. ஸ்வரூபதோ நித்ய மென்றும் ப்ரவாஹதோ நித்ய மென்றும் நித்ய வஸ்துக்கள் இருவகைப்படும். வேதமென்பது சப்த ராசியாதலால் உச்சரிக்கப்படாதபோது அது இல்லை யென்று சொல்ல வேண்டி வருதலால் வேதம் ஸ்வரூபதோ நித்யமாகாது. சிலர் பலர் சில பல விடங்களில் உச்சரியாமலிருந்தாலும் ஆங்காங்குப் பல விடங்களில் பலர் வேதத்தை உச்சரித்துக்கொண்டே யிருப்பர்களாதலால் ப்ரவாஹதோ நித்ய வகுப்பில் சேரும்.

நநு, எம்பெருமான் ஸ்ருஷ்டி காலத்தில் ஸகல பதார்த்தங்களையும் ஸ்ருஷ்டிப்பது போல வேதங்களையும் ஸ்ருஷ்டிக்கிற படியாலும், ஸ்ருஷ்டிக்கு முன்பு வேதம் இருக்க முடியாதாகையாலும், ஒரு காலத்திலே லயமடைவதும் ஒரு காலத்திலே ஸ்ருஷ்டிக்கப் பெறுவதுமான வேதத்தை நித்யமென்று எங்ஙனே சொல்ல முடியுமென்று சங்கை தோன்றும். கேண்மின்; ஈச்வரன் வேதத்தை ஸ்ருஷ்டிக்கிறானென்பது ஒரு நாளும் கிடையாது. வேதத்தை ஓதிவரும் அதிகாரிகள் பிரளயத்தில் அழிந்து போய்விட்டாலும் ஸர்வஜ்ஞனும் ஸர்வசக்தனுமான ஈச்வரன் வேதத்தின் ஆநுபூர்விகளைத் தான் ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருந்து "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோவை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை" என்கிற ச்ருதியின் படியே முன்னிருந்த ஆநுபூர்வி மாறாமல் அப்படியே நான்முகனுக்கு உபதேசிக்கிறான். ஆகவே வேத சப்தராசிகள் அநாதிநிதனமாகும். ஸ்வாமி ஸ்ரீபாஷ்யகாரர் தேவதாதிகரண ஸ்ரீபாஷ்யத்திலே "ஏததேவச வேதஸ்ய அபௌருஷேயத்வம் நித்யத்வஞ்ச; யத் பூர்வ பூர்வோச்சாரணக்ரமஜநித ஸம்ஸ்காரேண தமேவ க்ரம விசேஷம் ஸ்ம்ருத்வா தேநைவ க்ரமேண உச்சார்யமாணத்வம்" என்றருளிச் செய்திருப்பது இங்கே யநுஸந்தேயம். உபாத்யாயர்கள், இரவிலே உறங்கிக் காலையிலே கண் விழித்தெழுந்த வித்யார்த்திகளுக்கு வேதமோதுவிப்பது போல ஈச்வரன் பிரமன் முதலானார்க்கு வேதமோதுவிக்கிறானத்தனை. இதை ஸ்ரீபட்டர் * ஸம்ஸ்காரம் ப்ரதி ஸஞ்சரேஷு நிததத்......ஸுப்தோத்புத்த விரிஞ்சபூர்வ ஜநதாம் அத்யாப்ய* என்று சுலோகமாக்கியருளிச் செய்தார். இதனாலேயே வேதங்களுக்கு அபௌருஷேயத்வமும் நிரூபிதமாயிற்றென்று கொள்ளலாம். ஆனாலும் சிறிது விவரிக்கிறேன்.

உலகில் லக்ஷக் கணக்கான வாங்மயங்கள் தோன்றியிருக்கின்றன. ‘இதை இன்னரியற்றினர், இதை இன்னர் செய்தார்’ என்று ஒவ்வொரு நூலுக்கும் கர்த்தாக்கள் நிர்தேசிக்கப் பட்டுள்ளார்கள்; அப்படி வேதத்திற்கு ஒரு கர்த்தாவையும் யாரும் எந்நாளிலும் நிர்தேசித்ததில்லை. சிறு சிறு நூல்களுக்கெல்லாம் கர்த்தாக்கள் தெரிய வரும்போது அளவு கடந்த நூலாகிய வேதங்களுக்குக் கர்த்நா உண்மையாகவொருவரிருந்தால் அவரைச் சொல்லாமலிருப்பர்களா? வேதாந்தவாசிரியர் *ஆவக்தா ச்சந்தஸாம், வக்தா பஞ்சராத்ரஸ்ய யஸ் ஸ்வயம்* என்றருளியிருப்பது ப்ரஸித்தம். பஞ்சராத்ரத்திற்கு ஸ்வயம் வக்தா வென்றும், வேதங்களுக்கு ப்ரவசநகர்த்தா என்றும் இதில் சொல்லிற்று. இதனல் ஸர்வேச்வரன் கூட வேதகர்த்தாவல்லன் என்பது விளங்கிற்றன்ரோ?

பரம வைதிகர்களுங் கூட இதைப் பற்றி மனத்தில் சங்காகளங்கம் வஹித்திருக்கக் கூடும். (அதாவது) எந்த சப்தராசியும் ஒரு கர்த்தாவோ வக்தாவோ இல்லாமல் ஆவிர்ப்பவிக்க இயலாதாகையால் விஸ்தாரமான இதிஹாஸ புராணுதிகளை யெழுதிவைத்த மஹர்ஷிகள் தாமே வேதங்களையும் எழுதிவைத்திருப்பார்கள் என்று. நானுங்கூட இளமையில் இங்ஙனே எண்ணியிருந்ததுண்டு. நான் தெளிந்த விதத்தை இங்கு விவரிக்கிறேன். வேதங்கள் ஒரு நூறு வருஷங்களுக்கு உட்பட்ட காலத்தில் அச்சேறி வருகின்றனவே யன்றி அதற்கு முன் இவற்றை ஏட்டிலெழுதிவைத்தவர்களுங் கூடக் கிடையாது. ஓலைப்படாப்ரமாணம்’ என்றே பூருவர்களால் வழங்கப்பெற்றுள்ளது. வேதத்திற்கு ஸ்வரம் முக்கியமானது. அந்த ஸ்வர ஸந்நிவேசம் வெகு ஆச்சரியமாக அமைந்திருக்கின்றது. இந்த ஆச்சரியத்தை வேதமோதினவர்களுங்கூட ஆழ்ந்து அறிந்திலர் என்றும் சொல்லலாம். கேண்மின். வேதத்தில் பல லக்ஷக்கணக்கான பதங்கள் வருகின்றன. அவற்றுக்கு அமைந்திருக்கும் ஸ்வரங்கள் நியதங்களாய் ஓரிடத்திலும் பிறழாமலும் ஒரே பதத்திற்கு [ஸுபந்தமோ திங்ந்தமோ எதுவானுலும்] அர்த்த பேதத்தாலும் நிமித்த பேதத்தாலும் அமைந்த ஸ்வர பேதமும் ஓரிடத்திலும் பிறழாமலும் பூமண்டலம் முழுவதும் ஸமரூபமாக ஓதப்பட்டு வருவதை நோக்கினல் இது ஒரு புருஷனுடைய க்ருதிக்கு விஷயமாகக் கூடியதன்று என்பது ஸ்பஷ்டமாக விளங்கும். ஆகாசவாணியென்று ஒன்று சொல்லுவதுண்டே அதே போல வேதராசிகளும் ஆகாசத்திலே தோன்றிப் பரமபுருஷனல் க்ரஹிக்கப் பட்டிருக்கவேணுமே யல்லது பரமபுருஷனுக்குங் கூட இந்த சப்த ஸந்தர்ப்ப ஸங்கலனம் ஸாத்யமன்று என்று துணிந்து கூறுவேன்.

மற்ற வேதங்கள் ஒரு புறமிருக்க; ஸாம வேதத்தின் இயல்பை நோக்குவோம். அநாதி பரம்பரை யென்பதை இது கொண்டே அறுதியிடலாமே. உலகத்தில் ராஜாஜ்ஞை யென்பது பிரபலமாகச் சொல்லப் படுகிறது. அரசர்கள் அனைவரும் ஒன்று கூடிச் சில வாசகங்களைக் கோத்து இரண்டு மூன்று பக்கமே யெழுதிப் பிரசுரம் செய்து இதை உலக மெல்லாம் ஸமஸ்வரமாக உச்சரித்து வரவேணுமென்று கட்டளையிட்டால் அக்கட்டளை ஒரு சிறிய க்ராமத்திலாவது இரண்டொரு நாளாவது பரிபாலிக்கப் படுமாவென்று பாருங்கள். த்வீபாந்தரங்களிலுங் கூட வியாபித்திருக்கின்ற வேத ராசிகள் உலகம் போலவே அநாதியாய் அவிச்சிந்ந

பரம்பரையாய் வந்துகொண்டிருக்கின்றன வென்று இந்தப் பெருமையை யாவரும் இசைந்து தீர வேணுமே. பௌருஷேயமென்று நெஞ்சாலும் நினைக்க ப்ரஸக்தி யில்லை. அதனாலேயே வேதங்களானவை மானிடர்க்கு ஸஹஜமான இருள் துயக்கு மயக்கு மறப்பு முதலான எவ்வகைக் குற்றமுமற்று விளங்கா நின்றன.

வேதங்கள் அனந்தங்களென்பது காடகச்ருதியிலுள்ள பரத்வாஜோ பாக் கியானத்தினால் விளங்கும். தேவேந்திரனருளால் முந்நூறு பிராயம் ஜீவிதம் பெற்று அந்நாட்கள் முழுதும் வேதமேயோதின பரத்வாஜ மஹர்ஷி முந்நூறு வருஷகாலம் ஓதினதெல்லாம் மூன்று மலைகளாகக் காட்டப்பட்ட வேத ராசிகளில் மூன்று முஷ்டி மாத்திரமேயென்று முடிவுபெற்றுள்ளது. அந்த ப்ரகரணத்தில் தான் "அநந்தா வை வேதா:" என்றோதப்பட்டது. ஆக, நித்யமாய் அபௌருஷே யமாய் அதஏவ நிர்தோஷகந்தமாய் அவிச்சிந்ந பரம்பரா ப்ராப்தமாய் அனந்தமா யிருக்கின்ற வேதத்தின் மஹிமை வாசாமகோசரமென்று தலைக்கட்டி நிற்கிறேன்.

—

## நம்பெருமாள்ஸன்னிதியில் நான்கு உபந்யாஸங்கள்

இந்த ஸம்வத்ஸரத்தில் திருவத்யயநோத்ஸவம் கார்த்திகை மாதத் லேயே தொடக்கமானபடியால் திருவரங்கம் பெரிய கோயிலிலே நாலு நாளிருந்து ஸேவிக்க விரும்பித் திருநெடுந்தாண்டகத்திற்கே விடைகொள்ள பாக்கியப் வாய்த்தது. அப்போது மூன்று நாட்கள் (இரவில்) மணவாளமாமுனிகள் ஸன்னிதியிலும் கடைசியில் ஒரு நாள் பகலில் திருச்சிராப்பள்ளியில் திருக்கச்சி நம்பி ஸபையிலும் உபந்யஸிக்க ப்ராப்தமாயிற்று. அடியேனுடைய ஸம்பந்தியும் ஸ்ரீஸூக்திரத்நாகர பிருத பூஷிதருமான ஸ்ரீமதுபய வே. ஆழ்வார் திருநகரி இளையவில்லி. சடகோபாசாரியர் ஸ்வாமியின் ப்ரவசனங்களுக்கு ஸ்தானமான மேலே சொன்ன (திருச்சி.) திருக்கச்சிநம்பி ஸபையில் அந்த ஸ்வாமி இந்த ஸம்வத்ஸரமும் மார்கழித்திங்களில் திருப்பாவை வ்யாக்யானமும், அதன் பிறகு பெரிய திருமொழி வியாக்கியான ஸேவனமும் செய்தருளப்போவதை முன்னிட்டு அந்த ஸபையில் 15-12-66 பகலில் ஒரு பெருங்கூட்டம் கூடிற்று. அப்போது அங்கு அடியேனுடைய உபந்யாஸமொன்று நடைபெறவேண்டிற்று. முன்னம் அதைச் சிறிது விவரித்தெழுதிவிட்டுப் பிறகு மற்றமூன்று உபந்யாஸங்களை விவரிக்கிறேன்.

## 8. திருச்சித் திருக்கச்சிநம்பி ஸபையிலுபந்யாஸம்

திருக்கச்சிநம்பி தனியனைக்கொண்டு நம்பிகளின் வைபவத்தை [ராமாநுஜ முநேர்மாந்யத்வத்தை]ப் பேசி முடித்து, பெரிய திருமொழியின் பெருமையைப் பேசத்தொடங்கினேன். திருமொழியின் தனியன்களிலொன்றாகிய "நெஞ்சு கிருள்கடிதீபம்" என்கிற கட்டளைக் கலித்துறையில் "ஆரணசாரம் பரசமயப் பஞ் சுக்கு அனலின் பொறி பரகாலன் பனுவல்களே" என்ற விடத்தை உயிராக வெடுத் துக்கொண்டு ஆரணசாரம் என்றதை முன்னம் விவரிக்கத் தொடங்கினேன். ஆரணமென்பது வேதம். இது பொதுச் சொல்லாகையாலே "ஸ்வம் ஸம்ஸ்க்ரு

த்ராவிட வேத ஸூக்தை:" என்ற பட்டர் ஸ்ரீஸூக்தியின்படி வடமொழி தென்மொழி வேதங்களிரண்டையும் இங்கு விவக்ஷிதமாகக் கொண்டு, பரகாலன்பனுவல்கள் வடமொழி வேதஸாரமாயும் தென்மொழி வேதமாகிய திருவாய்மொழியின் ஸாரமாயுமிருக்குமென்று அங்கு உபபாதித்தேன். இரண்டையும் நாதிஸம்க்ஷேப விஸ்தரமாக நிரூபிக்கத் தொடங்கி திருமொழியின் ஒவ்வொரு சதகத்திலும் ஒவ்வொரு வேதார்த்தம் காணலாம்படியான பாசுரத்தை யெடுத்துக்காட்டி நிரூபிக்கலாயிற்று. *வாடினேன் வாடி தொடங்கி *நான் கண்டு கொண்டேன் நாராயணா வென்னும் நாமம்* என்று அருளிச் செய்து வருமளவில் (6) *எம்பிரானெந்தை யென்னுடைச் சுற்றம்* என்கிற பாட்டிலே நாராயணனே எல்லாவுறவு முறையுமென்பதை யருளிச்செய்திருப்பதானது *மாதா பிதா ப்ராதா நிவாஸச் சரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:* என்ற உபநிஷத்வாக்ய விவரணமாகும்.

இரண்டாம்பத்து. பகவச் சேஷத்வத்திற்காட்டிலும் பாகவத சேஷத்வம் சிறந்ததென்று கொள்ளப்படுகிறது ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில். அதை இரண்டாம்பத்தில் (6) * நண்ணாதவாளவுணர் பதிகம் முழுவதாலும் விளக்கியருளினர் ஆழ்வார். வேதத்தில் ஆருவது காண்டத்தில் இரண்டாவது ப்ரச்நத்தில் *யாவத்பிர் வை ராஜாநுசரை ராகச்சதி, ஸர்வேப்யோ வை தேப்ய ஆதித்த்யம் க்ரியதே* என்ஞேதியிருப்பது இதற்கு ஸம்வாதமாகக் கொள்ளத்தக்கது அந்த வேதவாக்கியத்தின் பொருள் யாதெனில்; ஒரு அரசன் வந்தால் அவனுக்கு மட்டும் உபசாரம் செய்வதில்லை; அவனுடன் வந்த அநுயாயிகளுக்குமெல்லாம் செய்யலாகிறது - என்பதாம். இதனல் பகவான் மட்டும் உபசரிக்கத் தக்கவனல்லன்; பாகவதர்களும் உபசரிக்கத் தக்கவர்களென்று காட்டப்பட்டதாகும். இது கொண்டே நம்மாழ்வார் (திருவாய்மொழியில்) * பயிலுஞ் சுடரொளி* நெடுமாற்கடிமைகள் அருளிச் செய்தாப்போலே இவ்வாழ்வாரும் * நண்ணாதவாளவுணரும்*கண்சோரவெங்குருதியுமருளிச் செய்தார்.

(மூன்ரும்பத்து.) ஸ்வகதஸ்வீகாரம், பரகதஸ்வீகாரம் என்று இரண்டுண்டு. எம்பெருமானை நாம் பற்றும்பற்று ஸ்வகதஸ்வீகாரமாகும்; அவனாக நம்மை ஸ்வீகரிப்பது பரகதஸ்வீகாரமாகும். இதை வேதபுருஷன் * நாயமாத்மா ப்ரவசநேந மேதயா....யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:* யம் ப்ரஜாபதிர் வேத ஸ புண்யோ பவதி* இத்யாதியாலே காட்டினன்; இது கீதாபாஷ்யத்திலே *அநந்ய சேதாஸ் ஸததம்* என்கிற சுலோகத்தின் பாஷ்யத்திலே விசதம். இவ்வர்த்தத்தை மூன்ரும்பத்தில் (7) * கள்வன்கொல் யானறியேன்* என்கிற திருமொழியில் வெகுரஸமாக அமைத்துக் காட்டினாராழ்வார். வயலாலி மணவாளன் தானே வந்து கைபற்றிக் கொண்டு போனதாகத் தாய் சொல்லுவதாய் வைத்துப் பேசினது பரகதஸ்வீகாரத்தின் பெருமையைக் காட்டினவாறேயாம்.

(நான்காம் பத்து.) *ஸோந்வேஷ்டவ்யஸ் ஸ விஜிஜ்ஞாஸிதவ்ய:* என்று ச்ருதி ஓதிற்று. ஸ: அந்வேஷ்டவ்ய:–அந்த பரமபுருஷன் தேடத்தகுந்தவன் என்று

பொருள். துர்லபமான வஸ்துவைத்தானே தேடுவர்கள். இந்த அந்வேஷணத்தை வேதங்கள் தாமும் செய்வதாகத் திருவுள்ளம் பற்றின ஆழ்வார் *நான் மறைகள் தேடியோடும் செல்வன்* என்றருளிச் செய்தார் (4-8-3ல்.) உடனே *யதோ வாசோ நிவர்த்தந்தே, அப்ராப்ய மநஸா ஸஹ* என்கிற உபநிஷத்தையடியொற்றி *நான்மறைகள் தேடியென்றுங் காணமாட்டாச் செல்வன்* என்றருளிச் செய்தார்.

(அஞ்சாம் பத்து.) தைத்திரீய ப்ராஹ்மணத்தில் (இரண்டாவது அஷ்டகம்-எட்டாம் ப்ரச்நம் ஒன்பதாமநுவாகத்தில்) *ஸோ அங்க வேத யதி வா ந வேத* என்று ஓதப்பட்டுள்ளது. இதற்கு முந்தினவாக்யம் *அஸ்யாத்யக்ஷ: பரமே வ்யோமந்* என்பது. பொருள்கேளீர்; ய:—யாவனொரு எம்பெருமான், அஸ்ய. இந்த ப்ரபஞ்சத்திற்கு, அத்யக்ஷ:—தலைவனாய்க்கொண்டு, பரமே வ்யோமந்—பரமபதத்தில் வாழ்கிறானோ, ஸோ அங்க—அவன் தானும், வேத—(தன்பெருமையை யறிந்தானோ, யதி வா ந வேத—அல்லது அறிந்திலனோ? என்பதாம். இப்படி ஸந்தேஹமாகச் சொல்லி வைத்தான் வேத புருஷன்; ஆழ்வார். ஸந்தேஹமென்ன ? நிச்சயந்தான்; தன் பெருமை தானறியமாட்டானென்பது திண்ணம்—என்று வேத புருஷனுடைய அபிப்ராயமாகக் கொண்டு (5-2-1.) ''தாம் தம்பெருமை யறியார்" என்று நிஸ்ஸந்தேஹமாகவருளிச்செய்தார். ஏற்கெனவே நம்மாழ்வார் திருவாய் மொழியில் ''தனக்கும் தன் தன்மைறிவரியானை" என்றருளிச் செய்து வைத்தார்.

(ஆறும் பத்து.) (6-1-3) *குழல் நிறவண்ண! நின் கூறு கொண்ட தழல் நிற வண்ணன் நண்ணார் நகரம் விழ, நனி மலை சிலைவளைவு செய்து அங்கழல் நிற அம்பதுவானவனே* பரமசிவன் திரிபுர ஸம்ஹாரம் செய்தது ஸ்ரீமஹாவிஷ்ணுவினருளாலே என்பதை யஜுர்வேதம் ஆறுவது காண்டம். இரண்டாம் ப்ரச்நத்தில் *தேஷாமஸுராணும் திஸ்ர: புர ஆஸந்* என்று தொடங்கியுள்ள அநுவாகத்திலுள்ள கதையை யடியொற்றி யருளிச்செய்தார். அங்குச் சொன்ன கதையாவது அஸுரர்களுக்கு மூன்று பட்டணங்களிருந்தன. ஒன்று இரும்புமயமானது, மற்றொன்று வெள்ளிமயமானது, இன்னொன்று பொன்மயமானது. அந்தப் பட்டணங்களினாலாகும் துன்பத்தைத் தேவர்கள் போக்கி வெற்றிபெற முடியாதவர்களாயிருந்தனர்; பிறகு ஓருபாயம் செய்து வெல்லத் தொடங்கினர். [தே இஷும் ஸமஸ்குர்வத] அவர்கள் அம்பை ஸித்தப்படுத்தினர். அந்த அம்புக்கு எப்படி மிடுக்கு உண்டாயிற்றென்ன; [விஷ்ணும் தேஜநம்] விஷ்ணு தேஜநமாக இருந்தாரென்றது. இது தன்னையே *அங்கு அழல்நிற அம்பதுவானவனே* என்றுரைத்தது.

(ஏழாம்பத்து) 7—10—1. * பெரும்புறக்கடலை யடலேற்றினை * என்று தொடங்கும் திருக்கண்ணமங்கைப் பாசுரத்தில் ''அரும்பினை அலரை * என்றவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் "யுவாகுமார:'' என்கிற வேத வாக்கியம் உதாஹரிக்கப்பட்டுள்ளது. இது யஜுர்வேதத்திலுள்ளதன்று. ருக்வேதத்தில் (அஷ்ட. 2—8—25.) உள்ளது. இதற்கு வைதிக பத பாடம் 'யுவா அகுமார:' என்றுள்ளதாதலால் (குமார:) என்று பதமாகச்சிலர் நினைத்திருப்பது தகுதியன்று. ஆசாரியர்களின் வியாக்கியானங்களில் '' [யுவாகுமார:] என்கிற

படியே ஏக காலத்திலே இரண்டவஸ்தையும் சொல்லலாம்படியிருக்கை'' என்கிற ஸ்ரீ ஸூக்தி காண்கையாலே (குமார:) என்கிற பதவிபாகமே ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றினதுபோல் தோன்றும். அப்படியன்று. ஆகுமார: என்பதற்கு ஈஷத்குமார: என்று பொருளாகையாலே அதையிட்டு ஆசாரியர்களின் வியாக்கியானம் அவதரித்தபடி. நஞ்ஞின் அர்த்தங்களைச் சொல்லும் வையாகரணர்கள் "தத் ஸாத்ருச்யம் அபாவச் ச ததந்யத்வம் ததல்பதா, அப்ராசஸ்த்யம் விரோதச் ச நஞர்த்தாஷ் ஷட் ப்ரகீர்த்திதா:." என்று காரிகையிட்டிருக்கையாலே அல்ப கௌமாரமுடையவனென்கிற பொருளே ஆசார்யாபிமதம். ஆழ்வார் எம்பெருமானை அரும்பாயும் அலராயுமிருப்பனென்று சொன்ன விடத்திற்கு 'யுவாகுமார:' என்ற ச்ருதிவாக்கியம் பொருத்தமானது. நம்மாழ்வார் *மாசூணுச் சுடருடம்பாய் மலராது குவியாது* என்றருளிச் செய்ததும் இதற்கு ஸம்வாதம்.

(எட்டாம்பத்து.) * தெள்ளியீர் தேவர்க்குந் தேவரென்கிற திருக்கண்ணபுரப் பதிகத்தில் (பா–6) *வடவரை நின்றும்வந்து இன்று கணபுரமிடவகை கொள்வது யாமென்று பேசினள்* என்று திருத்தாயார் பாசுரமுள்ளது. இத்தால் எம்பெருமானோடு அபேதத்தை ஆழ்வார் அநுஸந்திக்கிறாராயிற்று. ப்ருஹதாரண்ய கோபநிஷத்தில் (3-4.) * தத்தைதத் பச்யந் ருஷிர் வாமதேவ: ப்ரதிபேதே அஹம் மநுரபவம் ஸூர்யச்ச* என்றோதிற்று. ''அதர்வசிரஸ்ஸிலே ருத்ரன் தன்வைபவத்தைப் பரக்க நின்று பேசினன். தனக்கடங்காத ஐச்வர்யமாயிருந்தது. இவன் இப்படி பேசுகைக்கு அடியென்? என்று ச்ருதிதானே சங்கித்து * ஸோந்தராத் அந்தரம் ப்ராவிசத் * என்று பரமாத்மப்ரவேசத்தாலே சொன்னனென்றதிறே" (இது ஈட்டு ஸ்ரீஸூக்தி.)

(ஒன்பதாம்பத்து.) * ஹ்ரீச் ச தே லக்ஷ்மீச் ச பத்ந்யௌ * என்கிற வேத வாக்கு ஸுப்ரஸித்தமானது. எம்பெருமானுக்கு ஸ்ரீமஹாலக்ஷ்மியும் பூமிப்பிராட்டியும் தேவிமாரென்கிறது இதில். (ஹ்ரீ:) என்று பூமிப்பிராட்டிக்குத் திருநாமம். ஸ்ரீதேவியை முன்னம் சொல்லிப் பிறகு பூதேவியைச் சொல்ல வேண்டியிருக்க முந்துற முன்னம் பூதேவியைச் சொன்னதன் கருத்தைத் திருமங்கை யாழ்வார் ஒன்பதாம்பத்தில் திருக் கோட்டியூர்ப்பதிகத்தில் (9 10–2) * நிலமகள் செவ்வி தோயவல்லான் திருமா மகட்குஇனியான் * என்பதனுல் விளக்கியருளினர். 'நிலமகள் செவ்வி தோயவல்லான்' என்று முன்னே சொல்லி உடனே 'திருமாமகட்கு இனியான்' என்கையாலே இச் சொல்லழகை நோக்கிப் பெரியவாச்சான்பிள்ளை–பூமிப்பிராட்டியின் அழகிலே யீடுபட்டதுதானே காரணமாகப் பெரியபிராட்டியார்க்கு இனியனுயிருப்பதாகப் பொருள்பணித்தது இன்சுவை மிக்கது. பட்டர் ஸ்ரீகுணரத்நகோசத்திலே *தேவ்யஸ் ஸஹஸ்ரம் ததா யாபிஸ் த்வம் ஸ்தநபாஹுத்ருஷ்டிபிரிவ ஸ்வாபி: ப்ரியம் ச்லாகஸே* என்றருளிச் செய்திருப்பதையும் சேர்த்துக்கொண்டு ரஸாநுபவம் செய்யவேணும். ஸாபத்ந்யம் பாராட்டிப் பொறுமை கொள்ளாதே யிருப்பள் ஸ்ரீமஹாலக்ஷ்மி. பூமிப்பிராட்டிக்கு முதன்மையை ஸஹித்திருப்பள் என்று வேதபுருஷன் காட்டினதை ஆழ்வார் ரஸப்படுத்தியருளிச் செய்தாராயிற்று.

(பத்தாம்பத்து,) கடவல்லியில் *யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ் ச உபே பவத ஓதந:, ம்ருத்யுர் யஸ்யோபஸேசநம் க இத்தா வேத யத்ர ஸ:* என்றோதிற்று. இதையடியொற்றி * செஞ்சுடரும் நிலனும் பொங்கார்கடலும் பொருப்பும் நெருப்பும் நெருக்கிப்புகப் பொன்மிடறத்தனை போது அங்காந்தவன் காண்மின் * (10-6-1.) என்றருளிச் செய்தார். [பதினோராம்பத்து.] தைத்திரீயோபநிஷத்தில் * அத தஸ்ய பயம் பவதி * என்று பயத்தின்உத்பத்தியையும், *அத ஸோபயம் கதோ பவதி* என்று அபயப்ராப்தியையும் ஓதிற்று. இவ்விரண்டையும் (11—8.) * மாற்றமுளவாகிலும் சொல்லுவன்* என்கிறபதிகத்தில் ஆழ்வார் ஸ்வாநுபவத்தினால் காட்டியருளினர். பயத்திற்கு ஹேதுக்கள் பலவாயிருக்கும். ஆழ்வார்க்கு இங்குண்டான பயம் ஸம்ஸாரப்படுகுழியில் இன்னமும் தள்ளி வைப்பனோவென்று. இங்ஙனே யுண்டான பயம் நீங்கி அபயம்பெற்றபடியை அப்பதிகத்திலேயே *குன்றமெடுத்து ஆநிரைகாத்தவன் தன்னை* என்றதனால் காட்டியருளினர். திருவாய்ப்பாடியில் அதிவ்ருஷ்டியுண்டானபோது ஆநிரைக்கும் ஆயர்கட்குமுண்டான பயத்தை அநாயாஸேந போக்கினது போலே என்பயத்தையும் போக்கினனென்று ஸூசிப்பித்தபடி. *அவிவேககநாந்ததிங்முகே* என்கிற ஸ்தோத்ரரத்னம் காண்க.

தனியனில் ஆரணசாரம் என்றதற்கு வடமொழி வேதஸாரம் என்று கொண்டு இவ்வளவும் நிரூபிக்கப்பட்டது. இனி தென்மொழி வேதஸாரமென்று கொண்டு திருவாய்மொழியின் ஸாரத்தையும் இதில் நிரூபிப்போம். திருவாய்மொழிப்பாசுரங்களை முன்னேகாட்டிப் பரகாலன்பனுவல்களைப் பின்னே காட்டுதும்.

(திருவாய்மொழி–முதற்பத்து.) தொடங்கும்போதே தேவப்பெருமானைத் திருவுள்ளத்திற்கொண்டு *துயரறு சுடரடி தொழுதெழு என்மனனே* என்றாராழ்வார். பரகாலன் (1-4-4) *மனமே தொழுதெழு-அமரர்பெரு விசும்பருளும் பேரருளாளனெம்பெருமான்* என்றார். அஞ்சிறையமட நாரையில் (1-4.) தூதுவிட்டாரிவர். *தூவிரியமலருழக்கியில் (3-5. தூது விட்டாரவர். (இரண்டாம்பத்து) 2-2.) ஆடியாடியகங்கரைந்தில் தாய் பேச்சாலே தமது நிலைமையை யருளிச்செய்தாரிவர்; அவரும் இரண்டாம் பத்திலேயே *திவளும் வெண்மதிபோலென்கிற திருவிடவெந்தைப் பதிகத்தைத் தாய்பாசுரமாகப் பிறப்பித்துத் தமது நிலைமையை வெளியிட்டுக் கொண்டார். (மூன்றும்பத்து.) 3-9. *சொன்னால் விரோதப் பதிகத்தில் நரஸ்துதி பண்ணுங்கவிகளுக்கு நல்லவுபதேசமீந்தாரிவர். அவரும் (1-1-7.) *கண்டவா தொண்டரைப்பாடும் சொற்பொருளாளீர் சொல்லுகேன் வம்மின் சூழ்புனற்குடந்தையே தொழுமின் நற்பொருள் காண்மின் பாடி நீருய்ம்மின்* என்று இத்தகைய உபதேசமே செய்தார்.

(நான்காம்பத்து) இதில் *தீர்ப்பாரையாமினி யென்று தொடங்கும் ஆறும் திருவாய்மொழி பூர்த்தியாகக் கட்டுவிச்சி பாசுரமாக அமைக்கப்பட்டது நம்மாழ்வாரால். கலியனும் சிறிய திருமடலிலும், திருநெடுந்தாண்டகத்தில் *பட்டுடுக்கும் பாசுரத்திலும் கட்டுவிச்சியின் பேச்சுக்களை அமைத்தார். இதில் ஒருவாசியுண்டு. நம்மாழ்வார் பாசுரத்தில் தேவதாந்தரக் கட்டுவிச்சி. திருமங்கையாழ்வார் பாசுரத்தில் பரதேவதா ப்ராவண்ய முடைய கட்டுவிச்சி. இன்னமும் இந்த நாலாம்பத்தில்

*ஒன்றுந்தேவு திருவாய்மொழியில் பரதத்வ நிர்ணயமுள்ளது. திருமங்கையாழ்வார் பதினோராம்பத்தில் *மைந்நின்ற கருங்கடல்வாய்த் திருமொழியில் அதுதன்னைச் செய்தருளினர்.(ஐந்தாம்பத்து.) மாசறு சோதித் திருவாய்மொழியில் மடலூரும் ப்ரஸ்தாவம் செய்தாரிவர். இதை விவரிக்கும் வண்ணமாகத் திருமடல்களிரண்டருளிச் செய்தாரவர். இன்னமும் *கடல்ஞாலஞ் செய்தேனும்யானே யென்னும்* என்கிற வொருதிருவாய்மொழியினால் தம்மை ஸர்வேச்வரனாக அநுகரித்து அதனைத் தாய் பேச்சாலே பேசினரிவர். அவரும் (8-2-6.) *வடவரை நின்றும் வந்து இன்று கணபுரமிடவகை கொள்வது யாமென்று பேசினள்* என்று அவ்வநுகாரத்தைத் தாய் பாசுரத்தாலேயே பேசினர்.

(ஆறும்பத்து.) இதில் *மின்னிடை மடவார்கள்* என்கிற இரண்டாந் திருவாய்மொழியினால் கண்ணபிரானோடு ப்ரணய கலஹஸமநுபவித்தார். அவரும் (10-8.) *காதில் கடிப்பிட்டு திருமொழியினால் அதனையனுபவித்தார். இன்னமும் *குரவையாச்சியரோடு கோத்தது மென்கிற திருவாய்மொழியினால் கண்ணபிரானுடைய கோலச்செயல்களையநுபவித்தாரிவர். அவரும் (10-7.) *மான முடைத்துங்களாயர்குலமென்கிற (பதினான்கு பாசுரங்கொண்ட) திருமொழியினால் ஸ்ரீக்ருஷ்ண திவ்ய சேஷ்டிதங்களை மிக விரிவாக அநுபவித்தார். இன்னமும்(6-5.) *துவளில் மாமணிமாடத் திருவாய்மொழியில் *பின்னை கொல் நிலமாமகள் கொல் திருமகள் கொல்* என்று தமக்கு தேவதேவதிவ்ய மஹிஷிகளோடு ஸாம்யத்தை அந்யாபதேசத்தாலேயருளிச் செய்தாரிவர்; அவரும் *காவியங்கண்ணி யெண்ணில் கடிமாமலர்ப்பாவையொப்பாள்* என்று அந்யாபதேசத்தாலே தமக்கும் கடிமாமலர்ப் பாவையோடு ஸாம்யத்தை யருளிச்செய்தார்.

(ஏழாம்பத்து.) இதில் உபக்ரமத்திருவாய் மொழியில் பஞ்சேந்திரியங்களுக்கு ஆற்றமாட்டாமல் தாம் நலிவுபடுகிறபடியைப் பேசினரிவர். அவரும் ஏழாம்பத்தில் ஏழாந்திருமொழியில் இதுதன்னையே பேசினர். இன்னமும் *கங்குலும் பகலுமென்கிற திருவாய்மொழியில் "இங்கிவள்பால் என்செய்ய நீரெண்ணுகின்றது"என்று தாய்பாசுரத்தாலே பகவதபிப்ராயத்தைப் பலகால் வினவினரிவர். அவரும் (2-7.) திருவிடவெந்தைத் திருமொழியில் *உன் மனத்தாலென்னினைந் திருந்தாய்* என்று தாய் பாசுரத்தினாலேயே ப்ராப்திக்கு உபாயமாக அவனுடைய நினைவையே முக்கியமாகக் காட்டியருளினர்.

எட்டாம்பத்து. கீழே மூன்றும்பத்தில் பாகவதப்ரபாவாநு ஸந்தான பரமாகப் *பயிலும் சுடரொளி திருவாய்மொழி யருளிச்செய்ததை யடியொற்றிப் பெரிய திருமொழி இரண்டாம்பத்தில் *நண்ணாதவாளவுணர் திருமொழி அவதரித்தது. இப்போது எட்டாம்பத்திலும் பாகவத ப்ரபாவாநுஸந்தான பரமாகவே மறுபடியும் *நெடுமாற்கடிமை திருவாய்மொழி அவதரித்ததை யடியொற்றி அவரும் (7-4.) *கண்சோர வெங்குருதி பதிக மருளிச்செய்தார்.

ஒன்பதாம்பத்து. இதில் திருக்கண்ணபுரத் தெம்பெருமான் ஆழ்வார் தமக்கு தேஹாவஸானத்தில் மோக்ஷமளிப்பதாகத் திருவாய்மலர்ந்தருளினதை *மாலை

நண்ணித் திருவாய்மொழியில் *மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்*
என்பதனால் வெளியிட்டார். இதனால் நம்மாழ்வார்க்கு மோக்ஷ ப்ரதாநப்ரதிஜ்ஞை
செய்தவர் திருக்கண்ணபுரம் சௌரிராஜப் பெருமாள் என்று உலகப் பிரசித்தமாய்
விட்டது. இதைத் திருமங்கையாழ்வாரும் தெரிந்து கொண்டு திருக்கண்ணபுரத்
தெம்பெருமான் பக்கலிலே மிகுந்த கௌரவபுத்தி கொண்டார். அதனால் அப்
பெருமானுக்கு நூறு பாசுரம் ஸமர்ப்பிக்க வேணுமென்று ஆசை கொண்டு (பெரிய
திருமொழியில் எட்டாம்பத்து பூர்த்தியாகத் திருக்கண்ணபுரத்தானுக்கே ஸமர்ப்
பித்தாரராயிற்று. அந்தப் பதிகங்கள் பத்தில் ஒரு பதிகம் தொடங்குகையில்
“தொண்டீருய்யும் வகை கண்டேன்” என்றருளிச் செய்திருப்பது நம்மாழ்வாருடைய
பாவனையில் அமைந்த பாசுரம் என்னலாம். (பத்தாம்பத்து) திருவாய்மொழியின்
முடிவில் *சூழ் விசும்பணி முகிற்பதிகம் திருநாட்டிலநுபவத்தைப் பரக்கப்பேசுவது
திருநாட்டில் லீலாவிபூதியின் நினைவு வருவதற்கு ப்ரஸக்தி கிடையாது. அப்படி
யிருந்தும் *குடந்தையன் கோவலன் குடியடியார்க்கு—தொடர்ந்தெங்கும் தோத்
திரஞ் சொல்லினர்* என்கிற பாசுரம் மிகவற்புதமாக அவதரித்துள்ளது
அங்குள்ள ஸூரிகள் இவர்களை யுபசரிக்கும்போது ‘இவர்கள் திருக்குடந்தை
யெம்பெருமான் திருக்குணங்களிலே ஸந்தானமாக ஈடுபட்டவர்கள்’ என்று
சொல்லித் தொடர்ந்து தோத்திரஞ் செய்ததாகச் சொல்லிற்று. திருவரங்கம்
திருவேங்கடம் திருமாலிருஞ்சோலை முதலான திருப்பதிகள் கிடக்க. அவற்றை
யெல்லாம் விட்டுத் திருக்குடந்தையிலீடு பாட்டை யெடுத்துரைத்துத் தோத்திரஞ்
செய்ததாகவருளிச் செய்ததன் காரணம் ஆராயுமளவில், திவ்யப் பிரபந்தங்களெல்
லாம் லோபித்திருந்த காலத்தில் திருக்குடந்தை விஷயமான *ஆராவமுதே
யென்கிற பதிகமொன்று மட்டும் ஸ்ரீமந் நாதமுனிகள் திருச்செவியிலேபட
அதிலிருந்தே நாலாயிரமும் புநரவதாரம் செய்ய ப்ராப்தமாயிற்றென்று ஐதிஹ்ய
மாகையினாலே ஆழ்வார்க்கும் அங்குள்ள ஸூரிகட்கும் பவிஷ்யத் ஜ்ஞான
மிருந்தே இப்படி பாசுரம் தோன்ற நேர்ந்ததென்பது ரஹஸ்யமருமம். இவ்வாறுக
நம்மாழ்வார்க்குத் திருக்குடந்தையிலே அபிநிவேச மிருக்கும்படியை யுணர்ந்தே
திருமங்கையாழ்வார் ஸ்வப்ரபந்தாரம்பத்திலேயே (1-1-2) *சூழ்புனற குடந்
தையே தொழுது* என்றும் (1-1-7) *சூழ்புனற் குடத்தையே தொழுமின்* என்றும்
அருளிச்செய்ததன்றியும், சரமப்பிரபந்தமான திருநெடுந்தாண்டகத்தை முடித்தரு
ளும்போதும் *தண்குடந்தைக் கிடந்தமாலை நெடியானை யடி நாயேன் நினைந்திட்
டேனே* என்று நம்மாழ்வாரைப்போலவே திருக்குடந்தை நினைவாகவே முடித்தரு
ளினார். அதற்கடுத்த பாசுரத்திலும் ஒரு விசேஷத்தை அற்புதமாகக் காட்டி நின்
றார்; (அதாவது) *அன்னமாய் முனிவரோடு அமரரேத்த அருமறையை வெளிப்படு
த்த வம்மான் தன்னை* என்று நம்மாழ்வார்க்குத் திருநாட்டில் திருக்குடந்தை நினை
வு வருவதற்குறுப்பான ஐதிஹ்யத்தை முத்ராலங்காரரீதியில் காட்டிவைத்தார்
ஆசார்ய ஹ்ருதயத்தில் (151) “நாதயாமுனர் போல்வாரை அன்னமென்னும்”
என்றருளிச் செய்தபடி அன்னமாயும், நாதமுனிகளென்னும் படி முனிவராயுமுள்ள
நாதமுனிகளோடே கூட (அமரர் ஏத்த) திருக்குருகூரிலுள்ள நிலத் தேவர்களும்
துதிக்க (அருமறையை வெளிப்படுத்த வம்மான்) “நாதனுக்கு நாலாயிரமுரைத்தான்
வாழியே” என்கிறபடியே அருந்தமிழ்மறையை ஆழ்வார் வெளியிட்டாரென்கை

அடியேன் திருவரங்கம் பெரியகோயிலில் நடத்தும் உபந்யாஸங்களைப் பெரும்பாலும் பட்டர் ஸ்ரீஸூக்திகளை மூலமாகக் கொண்டே நடத்துவது வழக்கமாதலால், இப்போது ஸ்ரீரங்கராஜஸ்தவம் பூர்வசதகத்தில் உள்ளதான "அஹ்ருதஸஹஜதாஸ்யாஸ் ஸூரயஸ் ஸ்ரஸ்தபந்தா:" என்கிற சுலோகத்தைய வலம்பித்து இரண்டு நாள் உபந்யஸிக்கப்பட்டது. (இதன்பொருள்) நித்யஸூரிகளும் முக்தர்களும் முமுக்ஷுக்களுமானவர்கள் மநுஷ்யர்களாகவும் பசுபக்ஷிகளாகவும் ஸ்தாவரப்பொருள்களாகவும் வடிவெடுத்துக் கோயிலில் வாழ்கிறார்கள்; இவர்களுக்கு நமஸ்காரம்—என்பதாம்: இந்த ப்ரஸங்கத்தில் "வண்டினமுரலுஞ் சோலை மயிலினமாலுஞ்சோலை" என்கிற திருமாலைப்பாசுரம் ஸ்வாபதேசார்த்த பாசுரமாக விஜ்ஞாபிக்கலாயிற்று. கீழெடுத்த பட்டர் ஸ்ரீஸூக்திப்படி வண்டு மயில் குயில்களை உபபாதிக்கவேண்டியதாயிற்று. வண்டுவிஷயமொன்றுமட்டும் இங்கு சிறிது எழுதலாகிறது. வடமொழியில் வண்டுக்கு த்விரேப: என்றொருபெயர் ப்ரஸித்தமானது. தன்பெயரில் இரண்டு ரேபங்களையுடையது வண்டு. (அதாவது) ப்ரமர: என்கிற சொல்லும் வண்டுக்கு வாசகமாதலால் அதில் இரண்டு ரேபங்களிருப்பதால் த்விரேப மென்று பெயராயிற்று. நம்முடைய ஆசார்யச்ரேணியில் இரண்டு ரேபங்கள்கொண்ட திருநாமமுடையவர் வரவரமுனிகளொருவரேயாவர். [வண்டினமுரலுஞ்சோலை] வண்டினுடைய [வரவரமுனிகளுடைய] இனத்தைச் சேர்ந்தவர்கள் முரலும் திவ்யஸ்தலம் என்றபடி.

மூன்றாந்திருநாளில் பெரிய ஸந்நிதியில் நம்பெருமாள் திருமுன்பே அரையர் ஸேவையில் *திருப்பொலிந்தசேவடி விசேஷமாதலால் இன்று (மாமுனிகள் ஸந்நிதியில்) இதுவே உபந்யாஸ விஷயமாகக் கொள்ளப்பட்டது. பட்டர் பூர்வசதகத்தில் ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகளை வருணிக்கிற ச்லோகங்களில் *வந்தாருப்ருந்தாரகமௌலிமாலா* இத்யாதி ச்லோகத்திற்கும், ஆழ்வானுடைய அதிமாநுஷஸ்தவத்தில் *ஸ்ரீமத்பராங்குசமுநீந்த்ர மநோநிவாஸாத்* என்கிற திருப்பொலிந்த சேவடிவிஷயமானச்லோகத்திற்கும் ஸமந்வயம் விஜ்ஞாபிக்கப்பட்டது இவ்விஷயங்கள் விரிவாகப் பிறகு வெளிவரும். ஆக இவ்வளவும் ஸ்ரீரங்க-உபந்யாஸவிவரணம் முற்றுப்பெற்றது. ... .... .... *

---

## ஸ்ரீமத் D. R. அவர்களின் ஹிந்து மதிப்புரை விமர்சம்.

நேற்று 22—3—67 இரவில் அடியேனுடைய ஜன்ம நக்ஷத்ர விசேஷப்ரயுக்தமான (மூன்றாநாள்) கோஷ்டி முடிந்தவுடனே ஒருஸஹ்ருதயர் ப்ரஸ்தாவிக்க அதன் மேல் அடியேனுடைய விண்ணப்பம் வருமாறு. கடந்த ஐப்பசித் திருமூலத்தன்று அடியேன் அரங்கேற்றம்செய்து வெளியிட்ட ஸ்ரீமத் வரவரமுநீந்த்ரக்ரந்தமாலா ப்ரதமஸம்புடத்தைப்பற்றின விமர்சம் 26—2—67 ஞாயிற்றுக்கிழமையன்று வெளிவந்த ஹிண்டுபத்ரிகையில் ப்ரசுரமாகியுள்ளது. முடிவில் D. R. என்று இவ்வளவே கையொப்பம் காண்கிறது. அடியேனுடைய பரமாப்தரும் ஸஹ்ருதயரஸிகமணியுமான ஸ்ரீமதுபயவே. D. ராமஸ்வாமி ஐயங்காரவர்களால் அஃது

எழுதப்பட்டதென்று உணர்ந்தேன். மிக்க தூய்மைபொருந்திய உள்ளத்துடன் அக்ருத்ரிமமாக இந்த விமர்சம் வரையப்பட்டிருப்பதற்கு மிகமகிழ்ந்தேன்.

ப்ரஸ்தாவித்த க்ரந்தமாலையில் உபக்ரமத்தில் ஸ்ரீதேவராஜமங்களம் என்கிற பதின் மூன்று சுலோகங்கள் கொண்ட ஒரு ஸ்துதியும், அதற்கடுத்தபடி "காஞ்சி திவ்ய தேசஸங்க்ரஹ ச்லோக மாலிகை" என்று நான்கு சுலோகங்கள் கொண்ட வொரு ஸ்துதியும் பதிப்பிக்கப் பட்டுள்ளன. இவை அபூர்வமாகத் தமக்குத் தெரியவந்ததாய் அதிசங்கை தொனிக்க எழுதியுள்ளார் D. R. இதைப்பற்றி உலகம் தெளிவு பெறுமாறு சில வார்த்தைகள் இங்குச் சொல்ல வேணுமென்று ஒரு ஸஹ்ருதயர் ப்ரஸ்தாவித்தார். அந்த ஹிண்டு மதிப்புரையை ஏற்கெனவே நான் பார்த்திருந்தும் உபேக்ஷித்திருந்தேன். அதைப்பற்றி சர்ச்சை விளைந்திட்ட படியால் தத்துவம் வெளியிட அவசியமாகிறது. 1882 ஆம் ஆண்டில் முதன் முதலாக அச்சிடப்பட்ட (தமிழ் லிபியும் தெலுங்கு லிபியும் கலந்த) யதீந்த்ர ப்ரவண ப்ரபாவமென்னும் மாமுனிகளின் வைபவ நூலில் இந்த ச்லோகங்கள் எடுத்துக் காட்டப்பட்டிருப்பதை உலகம் கண்டு வருகிறது. காஞ்சீ வாஸிகளாய் தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்களான பெரியார்கள் இளம்பிராயத்துப் பிள்ளைகளுக்கு ஸ்தோத்ர பாடங்கள் கற்பிக்கும் போது இந்த ச்லோகங்களையும் பரம்பரயா கற்பித்து வருகிறார்கள். ஏறக்குறைய 45 ஆண்டுகட்கு முன் ஸ்ரீஉவே பண்டித கு. அனந்தாசாரியார் ஸ்வாமி அச்சிட்ட ஸ்தோத்ர பாட புஸ்தகத்திலும் இவை சேர்ந்திருக்கின்றன. அடியேன் செய்திருக்கிற ஸ்தோத்ர பாடப் பதிப்புகளிலும் இந்த ச்லோகங்கள் உரையுடனும் பதிப்பேறியுள்ளன. மேலே குறித்த D. R. அவர்கள் பல வருஷங்களுக்கு முன்பு தெலுங்கு லிபியில் அடியேன் பதிப்பித்துள்ள ஸ்ரீமத்வரவரமுநீந்த்ர க்ரந்தமாலையைத் தாம் கண்டிருப்பதாக ப்ரஸ்தாவித்திருக்கிறாரல்லவா? அதிலும் காணலாம். இந்த ச்லோக மாலிகைகளை இளமையில் மனப்பாடம் செய்துள்ள பெரியார்கள் இற்றைக்கும் பலருள்ளார்கள்.

மணவாள மாமுனிகள் அருளிச் செய்யாத க்ரந்தங்கள் சிலவற்றை அவரருளிச் செய்ததாகச் சில பெரியார்கள் மருண்டு அச்சிட்டிருக்கிறார்கள். அவற்றை அடியேன் ஆராய்ந்து அவை மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியல்ல வென்று நிரூபணம் செய்து பலகால் வெளியிட்டிருக்கிறேன். ப்ரக்ருத க்ரந்தமாலைப் பதிப்பிலும் அந்த நிரூபணங்களை உலகம் காண்கிறது. வேதாந்தவாசிரியர் இயற்றாத ஹரிதிந திலகம், கிம்க்ருஹேசஸ்துதி, நிகமபரிமலம், அடைக்கலப்பத்து, பிரபந்த சாரம் முதலியவற்றை அவர் இயற்றியதாக வெளியிட்டுக் கொண்டிருப்பாருளர். அவரருளிச் செய்த லோகார்ய பஞ்சாசத்ஸ்துதியை விட்டிருப்பாருமுளர். ஸமஸ்யாஸஹஸ்ரீ, என்று ஸ்வாமிக்கு பிருது என்கிற உண்மையையுணராமல் ஸ்வாமியின் க்ரந்தாவளீ பட்டிகையில் ['ஸமஸ்யாஸஹஸ்ரீ'–இந்த க்ரந்தம் லுப்தம். நிகம பரிமலம்—இதுவும் லுப்தம்.] என்று காலஞ்சென்ற சேட்லூர் நரஸிம்ஹாசார்ய ப்ரப்ருதிகள் எழுதிவைக்க, அதை வருஷம் தவறாமல் புதுப்பித்துக் கொண்டிருப்பாருமுளர். வரதன் ஸன்னிதி வரலாறு முதலிய அடியேனது நூல்களில் விரிவுள்ளது. ப்ராஸங்கிகமான விதை நிறுத்திக்கொண்டு மேலே செல்லுகிறேன்.

## ஐப்பசி மாதத்து உபந்யாஸங்கள்.

கார்த்திகை மாதத்திற்குக் கீழதான ஐப்பசி மாதத்தில் தேவப்பெருமாள் ஸன்னிதி மணவாளமாமுனிகள் திருமூல மஹோத்ஸவத்தில் ஒன்பது திருநாட்களிலும் இயற்பா சாத்துமுறை யன்றும் ஆகப் பத்து நாட்களில் உபந்யாஸங்கள் நடைபெற்றன. அந்தந்த நாட்களில் ஸேவை யாகிற பகுதியிலிருந்து ஒவ்வொரு ஸம்வத்ஸரத்தில் ஒவ்வொரு துணுக்கையைப் பற்றிக் கொண்டு அதிலிருந்து ரஸாநுபவம் செய்வது வழக்கம். பத்து நாளைய உபந்யாஸங்களையும் இங்கு விவரிப்பதனுல் பேரிடங்கொள்ளும். முதல்நாளில் திருவாய்மொழி முதற்பத்தில் *நாளுநந் திருவுடையடிகள் தம் நலங்கழல் வணங்கி* என்ற பாசுரத் துணுக்கையைக் கொண்டு ப்ராஸங்கிகமாக "இவள் ஸன்னிதியாலே காகம் தலை பெற்றது; அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்கிற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தி ஸமந்வயமாக விண்ணப்பம் செய்ததை மட்டும் சிறிது விரிவாக எழுதிவிட்டு மற்றைநாளைய உபந்யாஸங்களை ஸம்க்ஷேபிக்கிறேன்.

### இவள் ஸன்னிதியாலே காகம் தலைபெற்ற உபந்யாஸம்.

சதுர்ச்லோகியில் * ச்ரேயோ நஹ்யரவிந்தலோசநமந: காந்தாப்ரஸாதாத்ருதே ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்வஸு நருணும் ஸம்பாவ்யதே கர்ஹிசித்* என்றருளிச் செய்தபடி பங்கயத்தாள் திருவருளில்லையாகில் ஐஹிகமோ ஆமுஷ்மிகமோ எந்த ச்ரேயஸ்ஸும் பெறலாகாதென்பது சிலாலிகிதமே. இதை வற்புறுத்துகின்றது இன்றைய உபந்யாஸம். ஸ்ரீராமாயணத்தில் காகத்தின் கதை பொன்று ப்ரஸித்தமாக வுள்ளது. இக்கதை சித்திரகூட மலைச்சாரலில் நிகழ்ந்ததென்பது அனைவருமறிந்தது. எனவே இது அயோத்யாகாண்ட கதையென விளங்கிற்று. ஆனல் வான்மீகி முனிவரோ கம்பநாடரோ இக்கதையை அயோத்யாகாண்டநிகழ்ச்சிகளில் சேர்த்துப் பேசாமல் சுந்தர காண்டத்தில் ஸீதா பிராட்டி அனுமனுக்குக் கூறும் அடையாளமாக வைத்தே இருவரும் பேசியுள்ளார்கள். இக்கதையைச் சுருக்கமாகத் தெரிந்து கொள்ள வேண்டுமானல் "சித்திர கூடத்திருப்பச் சிறு காக்கை முலை தீண்ட, அத்திரமே கொண்டெறிய அனைத்துலகுந் திரிந்தோடி, வித்தகனே யிரா மா வோ! நின்னபயமென்றழைப்ப, அத்திரமே அதன் கண்ணையறுத்தது மோரடையாளம்" என்கிற பெரியாழ்வார் திருமொழியினல் தெரிந்து கொள்ளலாம். இப்பாசுரம் அனுமன் சீதைக்குச் சொல்லும் அடையாளமாக அமைந்திருக்கின்றதே! என்கிற விசாரம் இப்போது வேண்டா; அதைப் பற்றி இங்கு விஷயமில்லை. கதையின் போக்கில் சில பல விசாரங்கள் அறிஞர்களின் ஆராய்ச்சிக்கு இலக்காகி யிருப்பதனுல் அதைப்பற்றின விமர்சம் மட்டும் இங்குக் கொள்ளப் படுகின்றது. முன்னம் கதையைச் சிறிது விவரிக்கின்றேன். தேவேந்திரனுடைய மகனை ஜயந்தனென்பவன் காகவேடம் பூண்டு சித்திரகூடமலைச் சாரலில் வந்து மாமிசத்தில் ஆசையினல் பிராட்டியின் திருமுலைத் தடத்தை மூக்கால் குத்திக் குருதி குழம்பி யெழச் செய்தது; அப்போது இராமபிரான் பிரரட்டியின் துடையில் சாய்ந்து அயர்ந்து கண்வளர்ந்து கொண்

டிருந்ததனால் பிராட்டி வேதனை பொறுக்க மாட்டாமல் அவரைத் துயிலுணர்த்த, அவருமெழுந்து கண்டு மிகுந்த கோபங் கொண்டு ஆசனத்திலிருந்த ஒரு தருப்பைப் புல்லைக் கிள்ளி அதனை மந்திரித்து ப்ரஹ்மாஸ்திரமாக விட, அது காகத்தைத் துரத்திக் கொண்டு செல்ல, அபயந்தேடி மூவுலகும் திரிந்தும் எங்கும் புகல் பெறாத காகம் மீண்டும் இராம பிரானிடமே வந்து சேர, ப்ரஹ்மாஸ்த்ரம் பழுது படாதாதலால் அதற்குப் போக்குவீடாக அந்தக் காகத்தின் ஒரு கண்ணைக் குருடாக்கி உயிர்ப் பிச்சை யளித்துப் போக விட்டதாகக் கதை யுள்ளது.

இங்கு நிகழும் விசாரமேதென்னில்; பிள்ளைலோகாசாரியர் பிராட்டியினுடைய புருஷகாரச் சிறப்பை யெடுத்துரைக்குமிடத்து, காகம் மூவுலகும் திரிந்தோடி எங்கும் புகல் பெறாது பெருமாளிடமே திரும்பி வந்தபோது பிராட்டி உடனிருந்தமையால் தான் காகம் ரக்ஷை பெற்றது என்றுரைத்துள்ளார். முமுக்ஷுப்படியில் எம்பெருமானை ஆச்ரயிக்குமிடத்தில் பிராட்டி புருஷகாரம் ஆவச்யக மென்பதையும் அது அமோகமென்பதையும் நிரூபணம் செய்து வருகையில் "இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது, அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்று பிராட்டி உடனிருந்தபடியால் தான் காகம் காக்கப் பட்டதென்றும், அவள் உடனிராத படியால் தான் இராவணன் உயிர் தொலையப் பெற்றானென்றும் இங்கு எளிதாகக் கருத்துத் தேறுகின்றது. இங்குப் பல ஆக்ஷேபங்கள் எழுகின்றன. காகம் பெருமாளைச் சரணம் புகுந்தபடியால் ரக்ஷை பெற்றது, இராவணன் *த்விதா பஜ்யேயமப்யேவம்-ந நமேயம் து[?]கஸ்யசித்*= இருபிளவாகப் பிளந்தொழிந்தாலு மொழிவனே யன்றி ஒருவற்கும் தலைவணங்க மாட்டேனென்று செருக்கிச் சொல்லிச் சரணாகதி செய்யாதவனாதலால் மாண்டொழிந்தான் — என்பது தானே தத்துவம்; ஆகவே சரணாகதி செய்த காகத்தையும், அது செய்யாத இராவணனையும் சேர்த்துப் பேசுவது பொருந்த மாட்டாதே; காக சரணாகதி போலே ராவண சரணாகதியென்று ஒன்றிருந்தாலன்றோ அப்போது பிராட்டியின் ஸந்நிதான முண்டா இல்லையா? என்கிற விசாரத்திற்கு ப்ரஸக்தியுண்டாம். அப்ரஸக்தமாகவன்றோவுள்ளது — என்பது முதலாக்ஷேபம்.

இதற்கு ஸமாதானம் கேண்மின். சரணாகதியென்றால் என்ன? காகம் செய்த சரணாகதி எத்தகைத்து? என்னுமிதை முந்துறமுன்னம் ஆராய்ந்து முடிவு கட்ட வேண்டும். இந்த முடிவு எளிதானதன்று. நூற்கடலை ஆழ்ந்துணர்ந்த ஆசாரியர்கள். "பகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி:—ப்ரபத்தி:" என்றே முடிவு செய்துள்ளார்கள். அதாவது நம்மைக்காத்துக்கொள்ள நாம்முயற்சி செய்யும் வரையில் பகவான் நம்மைக் காத்தருள ப்ரவர்த்திக்க மாட்டாராதலால், அவருடைய ப்ரவ்ருத்திக்கு இடையூறான நம்முடைய ப்ரவ்ருத்தியில் நாம் ஓய்ந்து நிற்பதுதான் ப்ரபத்தி என்றவாறு. கஜேந்திராழ்வான் ப்ரபத்தி. த்ரௌபதீ ப்ரபத்தி என்னுமிடங்களில் இதைக் காணலாம். முதலை நீருக்கிழுக்க, யானை தரைக்கிழுத்துக் கொண்டிருந்தவரையில் பகவான் அருள் செய்ய ப்ரவர்த்திக்கவில்லை. பகவானுடைய ப்ரவ்ருத்திக்கு கஜேந்த்ராழ்வானுடைய அந்த ப்ரவ்ருத்தியே இடையூறாயிருந்தது. அது ஓய்ந்த நிலைமையையே ப்ரபத்தியாகக்கொண்டு காரியஞ் செய்தானெம்பெருமான். த்ரௌபதியும் தன்னுடைய மானரக்ஷணார்த்த

மாகத் தன் சேலையைத் தான் இறுக்கிக்கொண்டிருந்த வரையில் கண்ணபிரான் தானருள் செய்யப் புகுந்திலன். அவளுடைய அந்த ப்ரவ்ருத்தி ஓய்ந்த நிலைமையையே ப்ரபத்தியாகக்கொண்டு உடனே காரியஞ்செய்தான். இத்தகைய ப்ரபத்தி தான் காகத்தினிடமுள்ளது. அதாவது போக்கற்றுச் செயல் மாண்டு நின்ற நிலை. இது இராவணனிடத்திலுமுண்டு; காகத்துக்கும் இராவணனுக்கும் இது வாசியற்றது–என்பதை மேலே விவரிப்போம். காகத்தின் ப்ரபத்தியை இன்னமும் விவரித்து நன்கு நிலைநாட்டிவிட்டு அதிற் செல்வோம்.

இக்கதையைப் பிராட்டி அனுமனுக்குச் சொல்லும்போது "த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கத:" என்று சொன்னதாக வான்மீகத்திலுள்ளபடியாலும். ''வித்தகனே இராமா ஓ! நின்னபயமென்றழைப்ப'' என்று பெரியாழ்வார் பணித்திருக்கையாலும், கம்ப நாடரும் ''ஐய! நின் சரணம் சரணென்று அவனஞ்சி, வையம் வந்து வணங்கிட வள்ளல் மகிழ்ந்தே" என்று கூறி யிருக்கையாலும், பிள்ளைலோகாசாரியர் தாமே ஸ்ரீவசன பூஷணத்தில் ப்ரபத்தி பண்ணினவர்களைக் காட்டும் சூர்ணையில் தருமபுத்திரர் முதலானரோடொப்பக் காகத்தையு மெடுத்திருக்கையாலும் காகம் சரணாகதி செய்யவில்லை யென்று எங்ஙனே சொல்ல முடியுமென்று ஆக்ஷேபம் வரும்; வேறு போக்கிடமற்று அவ்விடமே வந்து சேர்ந்தானென்பதுதான் தேறின பொருளென்பதைப் பூருவர்கள் காட்டியுள்ளார்கள். ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்னத்தில் காகத்திற்கு அருள் செய்ததைக் கூறும் ச்லோகத்தில் ''தாத்ருசோ வாயஸஸ்ய ப்ரணத இதி தயாலு:" என்று மருமமாக அருளிச் செய்தார். ''ப்ரணதே வாயஸே தயாளு:" என்னமல் ''ப்ரணத இதி தயாளு:" என்றருளிச் செய்ததன் கருத்தை ஸ்தோத்ர பாஷ்யத்தில் வேதாந்தவாசிரியர் விவரித்துள்ளதாவது பெருமாள் திருவுள்ளத்தாலே ப்ரணதனாகக் கொள்ளப்பட்டானென்று. மூலத்திலுள்ள சொல்வடிவமே இதை நன்கு காட்டுகின்றதல்லவா? வான்மீகத்தில் ''த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கத:" என்றும், "ஸ தம் நிபதிதம் பூமௌ சரண்யச் சரணாகதம்'' என்றும் பிராட்டி கூறினதாகவுள்ள விடத்தில் வியாக்கியான சக்ரவர்த்தியான கோவிந்தராஜர் மிக்க தெளிவுகாட்டி யெழுதியுள்ளார். பகவச்சாஸ்த்ர வசனப்படியும், லௌகிக நிகண்டுகளின் படியும், சரணமென்று க்ருஹத்திற்குப் பெயராதலால் இராமபிரானுடைய இருப்பிடத்திற்கு வந்தானென்பதே பொருள் என்றார். ''சரணம் கத:—நிவாஸம் கத:; ந து உபாயதயா கத:'' என்பது கோவிந்தராஜீய வாக்கியம். ஆகவே காகத்திற்கு சரணாகதியினாற்பேறு என்பதற்கிடமில்லை. காகம் சரணாகதி பண்ணினதாகவும் ஒருபக்ஷமுண்டு. அதன் மருமத்தை பாத்மபுராணம் காட்டியுள்ளது. காகம் கதியற்றுக் கீழே விழுந்த வளவில், அப்போது இராமபிரான் பாராக்கா யிருக்க, பிராட்டி காகத்தின் தலையைப் பெருமாள் திருவடியோடே சேர்த்து, சரணாகதி செய்ததாக என்பித்தாளென்று. இதை யிட்டே ''இவள் ஸன்னிதியாலே காகம் தலைபெற்றது'' என்கிற ஆசார்ய திவ்ய ஸூக்தி அவதரித்தது.

இதன்மேல் இன்னமும் தோன்றும் ஆக்ஷேபங்கள் சிலவற்றை எடுத்துப் பரிஹாரமுரைக்கிறேன். காகம் தான்செய்த அபராதத்திற்குத் தண்டனையாகக்

கண்ணிழந்திருப்பது உலகமறிந்தது. அப்படி யிருக்க, பிராட்டியின் புருஷகாரம் பலித்ததாகவோ காகம் ரக்ஷைபெற்றதாகவோ கொள்வதற்கில்லையேயென்று சிலர் சங்கிப்பதுண்டு. இதற்குக் கேண்மின். இக்கதையை அநுமனுக்குக் கூறுகின்ற பிராட்டி "வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்" (ரக்ஷித்தருளினார்) என்று சொல்லியிருப்பது ஸ்பஷ்டமாயிருக்க அவனை ரக்ஷிக்கப் படாதவனைச் சொல்லுவது ஏலாது. ரக்ஷணமாவது இஷ்ட ப்ராபணந்தானே. காகத்திற்கு எது இஷ்ட மென்பதை ஸ்ரீவசனபூஷணம் தெரிவித்துள்ளது. உயிரையே பலனைக் கொண்ட காகம் உயிர் பெற்றதனால் ரக்ஷை பெற்றதாகவே யாயிற்று.

இதன்மேலும் ஒரு கேள்வி வரும். பிராட்டியின் ஸன்னிதானத்திலும் காகத்திற்குக் கண் போயிற்றென்றால் புருஷகாரத்தின் மேன்மை யென்னவது? என்று. இக்கேள்வியைப் பலர் பிரபலமாகக் கேட்பதுண்டு; இதற்குக் கேண்மின்.. கொலை செய்தவொருவன் அரச தண்டனைக்காளாம்போது கொலையுண்ணக் கடமைப் பட்டவனாயினன்; "நமக்குக்கொலை தப்பாது" என்கிற நிச்சயமும் அக்குற்றவாளனுக்குத் திடமாகவிருந்தது. ஆனால் பிரபலமான சிபாரிசு பிடித்தான். அதனால் ஆயிரம் ரூபா அபராதத்தோடும் ஒரு மாதம் சிறைவாஸத்தோடும் மீண்டான். உயிருக்கு அபாயமின்றி மீண்டுவந்த அவன் ஆயிரம் ரூபாய் அபராதத்தையும். ஸ்வல்ப சிறை வாஸத்தையும் ஒரு தண்டனையாக மதிப்பனோ? சிபார்சு செய்தவர் தாம் தம்முடைய சிபார்சு பழுதுபட்டதாக நினைப்பரோ? தீரக்கழிய அபராதம் பண்ணின காகத்திற்கு அபசார பலன் உலகப்பிரசித்தமாம்படி ஒரு கண் தொலையட்டு மென்று பிராட்டியும் திருவுள்ளம் பற்றியிருக்கக்கூடும். பெருமாளுடைய ப்ரஹ்மாஸ்த்ரம் பழுதுபடக் கூடாமைக்குச் செய்வித்த லகு தண்டனை இது. மற்றும் வெகுநுட்பமான அர்த்தமொன்று இங்குக் குறிக்கொள்ளத் தக்கது. அனுமனிடம் இக்கதையைக் கூறுகின்ற பிராட்டி 'வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்" என்று கூறி யிருக்கிறாள். இங்கு க்ருபயா என்கிற பதம் அவசியமா? என்று பார்க்கவேணும். வதத்திற்கு உரியவனை ரக்ஷிக்கும்போது கருணை யில்லாமல் ரக்ஷிக்க முடியுமோ? "வதார்ஹமபி காகுத்ஸ்தோ ராகவ: பர்யபாலயத்" என்று சொல்லி யிருக்கலாம். தன் குடிப்பிறப்புக்கு உரிய நீர்மையினால் ரக்ஷித்தருளினனென்கிற பொருள் கிடைத்தே தீருமே. அப்படியிருக்க "க்ருபயா" என்றது பொருந்தவேணுமானால் அதற்கொரு பொருள் சொல்லியேயாக வேண்டும். "தேவ்யா காருண்ய ரூபயா" என்கிற ப்ரஸித்த ப்ரமாணத்தில் பிராட்டி கருணையே வடிவெடுத்தவளாகச் சொல்லப்பட்டிருப்பதால் "க்ருபயா" என்கிற சொல் பிராட்டியாகிய என்னாலே என்னும் பொருளுடையது. நான்தான் காகத்தை ரக்ஷித்தேனென்று சொல்வது வினயத்திற்குச் சேராததலால் "க்ருபயா" என்கிற சொல்லால் மறைத்துச் சொன்னாளென்பது தத்துவம். இது கொண்டே "இவள் ஸன்னிதியாலே காகம் தலைபெற்றது" என்கிற முமுக்ஷுப்படி ஸூக்தி அவதரித்தது.

இனி 'அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்கிற அடுத்த வாக்கியத்தில் தோன்றும் சங்கைக்குப் பரிஹாரம் கேண்மின். அது இல்லாமையாலே என்பதற்கு பிராட்டியினுடைய ஸான்னித்யமில்லாமையாலே என்பது தானே பொருள்.

"ந நமேயம் து கஸ்யசித்" என்று பிடிவாதங் கொண்டிருந்த இராவணன் பக்கலிலே பிராட்டியிருந்து தான் என்ன செய்யமுடியும்? ஒன்றுஞ் செய்யமுடியாது. ஆகவே இந்த வாக்கியம் இந்த பிரகரணத்திற்குச் சேருவது எங்ஙனம்? என்பது சங்கை. இதற்குப் பரிஹாரம் மணவாளமாமுனிகள் செய்திருப்பது இங்ஙனே; "ராமராவணயோர் யுத்தம் ராமராவணயோரிவ'' என்னும்படி பயங்கரமான யுத்தம் நடந்து கொண்டு இருக்கையில் ஒரு நாளைய நிகழ்ச்சியைக் கூறுகின்ற வான்மீகி முனிவர் "யோ வஜ்ரபாதாசநி ஸந்நிபாதாத் ந சுக்ஷுபே நாபி சசால ராஜா, ஸ ராம பாணபிஹதோ ப்ருசார்த்தச் சசால சாபஞ்ச முமோச வீர:" என்று கூறியுள்ளார். தன் தலையில் வஜ்ராயுதமும் இடியும் விழுந்தபோதுங்கூடச் சிறிதும் கலங்காமலும் சளைக்காமலுமிருந்து வந்த இராவணன் அன்று நிலை கலங்கி வில்லையும் கீழே பொகட்டு நின்றான். பிறகு பெருமாள் "இன்று போய் நாளை வா" என்று விடை கொடுத்தருளினர் என்பது இருக்கட்டும். "சசால சாபஞ்ச முமோச வீர:'' என்ன நின்ற நிலையுண்டே அது தான் போக்கற்றுச் செயலற்று நின்ற நிலை. அது காகத்துக்கும் இராவணனுக்குமொக்கும். அப்போது பிராட்டி உடனிருந்தாளாகில் காகத்தைக் காத்ததுபோல இராவணனையும் பெருமாளிடம் சிபார்சு செய்து காத்தேயிருப்பள். அவளுடைய ஸன்னிதானமின்மையால் தான் இராவணனுக்கு முடிவு விளைந்தது என்பதாக ஆசாரியர்களின் திருவுள்ளம். ஆக முமுக்ஷுப்படி ஸ்ரீ ஸூக்தியில் அநுபபத்திலேசமுமில்லையாயிற்று. இங்ஙனே முதல் திருநாளுபந்யாஸம் மட்டும் இங்கு விவரிக்கப்பட்டது. மற்றவை ஸாரஸம்க்ஷேபமாக எழுதப்படுகின்றன விரிவுக்கஞ்சி. ... ... (1)

இரண்டாமுத்ஸவத்து உபந்யாஸ ஸம்க்ஷேபம். இன்று இரண்டாம்பத்தில் இரண்டாந்திருவாய்மொழியில் *ஏறனைப்பூவனை* என்றுதொடங்கும் மூன்றாம்பாட்டில் *மாறனில் மிக்குமோர் தேவு முளதே* என்கிற ஈற்றடியில் ஒரு நுண் பொருள் கேண்மின். இவ்வடியை நாம் ஸேவிக்கும்போது 'மால்தனில் மிக்குமோர் தேவு முளதே' என்று ஸேவித்தாலும், ஆழ்வார்க்கும் இப்படியே விவக்ஷிதமானாலும் எதுகைக்குச் சேர "மாறனில் மிக்குமோர் தேவு முளதே'' என்றே ஆழ்வார் திருவாக்கில் வந்த பாடம் என்னத் தட்டில்லை. ஆழ்வாருடைய திருநாமங்களில் மாறன் என்பதும் ஒன்றாதலால், மாறனில் மிக்கும்—ஆழ்வார்க்குமேற்படவும் ஒரு தெய்வமுண்டோ? என்கிற பொருள் தான் திருவாய்மொழியைப் பட்டோலை கொண்ட மதுரகவிகளின் திருவுள்ளத்தில் பட்டிருக்கும். இதற்குச் சேர முந்தின மூன்றடிகளை நிர்வஹிக்கும் வழியுமெளிதாகவுண்டு. (விரிவுக்கு அஞ்சி விடுக்கப்பட்டதிங்கு. கோஷ்டியில் விஜ்ஞாபிக்கப்பட்டது. .... .... (2)

மூன்றாமுத்ஸவம். இன்று *முடிச் சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ* என்கிற (3-1-1) பாட்டின் முதலடியை ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் ஸ்ரீரங்கநாதனுடைய திருவபிஷேகத்தை வருணிக்கப் புகுந்த பட்டர் *கிரீடசூடாத்நராஜி ராதிராஜ்ய ஜல்பிகா, முகேந்து காந்திருந்முகம் தரங்கிதேவ ரங்கிண:* என்கிற சுலோகத்திலுல் மொழி பெயர்த்தாரென்று விவரிக்கும் ப்ரஸங்கத்தில் பட்டர் திருவாய்மொழியில் ஈடுபட்ட ப்ரகாரங்கள் விவரிக்கப்பட்டன. (3)

நான்காமுத்ஸவம். இன்று * ஏருளுமிறையோனு மென்கிற திருவா மொழியை ஆளவந்தார் தம்முடைய ஸ்தோத்ர ரத்னத்தில் *நதேஹம் நஹ்ராணு நச ஸுகம்* இத்யாதி ச்லோகமொன்றினுல் மொழிபெயர்த்தருளினுரென்பதை விவரித்து ப்ராஸங்கிகமாக ஆளவந்தார்க்குத் திருவாய்மொழியிலும் ஆழ்வா பக்கலிலுமுள்ள ஈடுபாடு விரிவாக விளக்கப்பட்டது.

## இடையில் ஒரு விசேஷ விஜ்ஞாபனம்.

இப்போது எழுதப்பட்டுவருகிறவிது ஐப்பசி மாதத்து உபந்யாஸ விஷயம்—என்பது அன்பர்களுக்கு நினைவிருக்கும். இதை அடியேனெழுதுவது இப்போது நிகழும் ஸ்வகீய ஜன்மநக்ஷத்ர விசேஷத்தினிடையில். (அதாவது) 23—3—67 வியாழக்கிழமை யிரவு 10 மணிக்கு இந்த கெட்டம் எழுதத் தொடங்குகிறேன். மேலே குறித்த விசேஷப்ரயுக்தமாக ஸ்வக்ருஹத்தில் நடைபெற்றுவரும் அருளிச்செயல் கோஷ்டியில் திருவாய்மொழி நாலாம்பத்து ஸேவை நடந்துவருகையில் உடனெழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. திருமலை ஈச்சம்பாடி வரதாசாரியர்ஸ்வாமி *வையம்பன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே* என்கிற பலச்ருதிபாசுரம் ஸேவிக்கப்படும்போது ஒரு வார்த்தை என்னிடமுரைத்தார்; (அதாவது) இப்பாசுரத்தில் வையம்மன்னி வீற்றிருத்தல் என்கிறபலனும், விண்ணுமாள்வர் மண்ணூடே என்கிற பலனுமாக இரண்டுபலன்கள் ஸாதிக்கிருர்; மண்ணூடே விண்ணுமாள்வதென்கிற பலன் எப்படியானுலும் வையம் மன்னி வீற்றிருப்பரென்று ஆழ்வார் திருவுள்ள முகந்து ஸாதித்த பலன் சாலவழகியது-என்று ஸாதித்தார். அப்போது அடியேன் விஜ்ஞாபித்தது ஸங்க்ரஹம். அதை இங்குச் சிறிது விவரித்து எழுதுகிறேன். [திருவாய் மொழி நாலாம்பத்துஸேவை அநுபவத்தில் இது ப்ராஸங்கிகம்.] விண்ணுமாள்வர் மண்ணூடே என்பதற்கு - இந்த லீலா விபூதியிலிருந்து கொண்டே பரமபதத்தையும் ஆளப் பெறுவர்கள் என்று பொருள். இதை ஆசாரியர்கள் விவரித்தருளுகையில், இங்கிருந்து கொண்டே பரமபதமும் தங்கள் சிறு 'முறியின்படி செல்லுமாறு ஆளப் பெறுவர்களென்றும், அங்குப் போன பிறகு அங்குள்ள நித்யமுக்தர்கள் 'ஆண்மின்கள் வானகம், என்று சொல்ல, அதன் பிறகு ஆளுகையன்றிக்கே இங்கிருந்து கொண்டே ஆளப் பெறுவர்களென்று மருளிச் செய்கிருர்கள். அடியேனுக்குத் தோன்றினதாவது—அருளிச் செயல் வல்லவர்கள் இப்படி ஆங்காங்கு பெரிய திருவோலக்கமாக எழுந்தருளி யிருந்து *ஊற்றின் கண் நுண்மணல் போலுருகா நிற்பர் நீராயே* என்றும் *ஒன்பதோடொன்றுக்கும் மூவுலகு முருகுமே* என்றும் ஆழ்வார் தாமே அருளிச்செய்தபடி தாங்களும் உருகிக்கொண்டு கேட்பாரையும் உருகச் செய்து கொண்டு அருளிச்செயலை ஸேவிக்க, அவர்களிடையே இருக்கப் பெறுவதானது விண்ணையாள்வதற்கும் மேற்பட்ட பேறன்றே. ஆகவே வையம்மன்னி வீற்றிருத்தல் ஒருபலன், மண்ணூடே விண்ணுமாளுகை மற்றொருபலன் என்று கொள்ளாமல் இவையிரண்டும் சேர்ந்து ஒரேபலன் என்று கொள்ளலாம். ஆழ்வார் தம்முடைய

ஸ்ரீஸூக்திகளின் இனிமையைத் தாமே கண்டு இதை ஓதுமவர்கள் ஒரு நாளும் பரமபதம் செல்லப்பெறாதே இந்நிலவுலகி லிருந்து கொண்டே திருவாய்மொழியையே ஓவாத ஊணாக உண்டு கொண்டிருக்கக் கடவர்கள் என்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்த விது ஆச்சரியமான பலச்ருதி. இவ்வாழ்வார் தாமே மேலே ஒன்பதாம் பத்தில் *தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்* என்கிறார்; இந்த ஸ்ரீஸூக்தியின் ஔதார்யத்தை என்னென்போம். தம்முடைய கவித்திறமையையும் பக்தி ப்ரகர்ஷத்தையும் காட்டுவதற்காக வன்றிக்கே தொண்டர்கள் அமுதுண்ண வேணுமென்கிற திருவுள்ளங்கொண்டே ஆழ்வார் அருளிச் செய்து வைத்ததும், அதற்குச் சேர நாதமுனிகள் பக்தாம்ருதம் என்று தனியனிட்டருளினதும், ஆளவந்தார் எம்பெருமானார் ஆழ்வான் பட்டர்போல்வாரான ஆசாரியர்கள் "நமக்கு ஸம்ஸ்க்ருத வேதமிருக்க இந்தத் தமிழ்ப்பிரபந்தங்கள் ஏதுக்கு? என்று நினையாதே இதை வலக்கண்ணாகவும் வடமொழி வேதத்தை இடக்கண்ணாகவுங் கொண்டதும் விலக்ஷணபகவத் ஸங்கல்பமென்னுமித்தனை. (இது இங்கு ப்ராஸங்கிகம்.)

ஐந்தாம் உத்ஸவம். இன்று திருவாய்மொழி ஐந்தாம் பத்து ஸேவிக்கத் தொடங்குவதற்கு முன்னாடி "திருமொழி தொடக்கம்" என்று பெரிய திருமொழியில் முதல் திருமொழி *வாடினேன் வாடி பூர்த்தியாக ஸேவிப்பது வழக்கம். இது காஞ்சீ ப்ராந்தத்தில் தவிர வேறெங்கும் காண்பதன்று. இன்று பராங்குச பரகாலர்களிருவர்க்கும் ஒரு சேர்த்தி ப்ரத்யக்ஷமாகக் காண நேருவதனால் இவ்வாழ்வார்களிருவர்க்கு முண்டான ஐகரஸ்யம் அநுபவிக்கப்படுவது வழக்கம். இவ்வாண்டிலநுபவித்ததாவது, "திருக்குறுங்குடியில் நம்மாழ்வாருடையவும் திருமங்கையாழ்வாருடையவும் அநுபவம்" என்பதாம். நம்மாழ்வார் திருக்குறுங்குடிக்கு ஒரு பதிகமே அருளிச் செய்தார்; திருமங்கையாழ்வார் இரண்டு பதிகமருளிச் செய்தார். நம்மாழ்வாருடைய ஒரு பதிகம் தலைமகள் பேச்சாக அவதரித்தது. கலியனுடைய முதற் பதிகமும் அங்ஙனமே யவதரித்தது. இவ்வநுபவங்களின் ப்ரணாளிகளை இங்கு விவரிக்க இடமில்லை. கோஷ்டியில் விவரிக்கப்பட்டது.

ஆறாவது உத்ஸவம். இன்று ஆறாம்பத்து ஸேவையில் *குரவையாச்சியரோடு கோத்ததும்* என்கிற நாலாந்திருவாய் மொழியில் ஆழ்வாருடைய செருக்குமொழிகள் விவரித்து விஜ்ஞாபிக்கப் பட்டன. "என்ன குறை நமக்கே? எனக்கெவ்வுலகம் நிகரே? எனக்கென்னினி நோவதுவே-எனக்கென்னினி வேண்டுவதே-எனக்கார் நிகர் நீணிலத்தே-எனக்கார் பிறர் நாயகரே" என்றிப்படிப் பட்ட வாசகங்களைக் கேட்பவர்கள் 'இவை நம்மாழ்வாருடைய திருவாக்காகத் தோன்றவில்லையே' என்பர்கள். *நீசனேன் நிறையொன்றுமிலேன்* என்றருளிச் செய்த ஆழ்வாரா இப்படியருளிச் செய்கிறார்? என்று கேட்பாரு முளர். இவ்வளவு செருக்கிச் சொல்வதன் காரணத்தை இங்குச் சுருக்கமாக வெழுதுகிறேன். கீழ் ஐந்தாம்பத்தில் *பிறந்த வாறும் வளர்ந்த வாறும்* என்கிற இறுதிப் பதிகத்தில் கண்ணபிரானுடைய குண சேஷ்டிதங்களை யநுபவிக்கத் தொடங்கி நெக்கொசிந்து கரைந்து உருகி அநுஸந்திக்க முடியவில்லையே யென்று தளர்ந்து, தரித்து நின்று அநுஸந்திக்கும்படி வலிமை தந்தருளவேணுமென்று ப்ரபத்தி பண்ணினார். ஆழ்

வாருடைய இந்த ஆபத்தியையாவது ஸபல மாக்கி வைப்போமென்று நினைத்த எம்பெருமான் அப்படியே ஸபலமாக்கி வைத்தருளினன். அதனால் ஆழ்வார் பண்டு மதுவனத்தில் மதுபானம் பண்ணின வானர முதலிகளைப் போன்று ஆரவாரிக்கிருர். இப்பதிகத்திற்கு நூற்றந்தாதி பாசுர மிட்டருளின மணவாள மாமுனிகள் "களித்துப் பேசும் பராங்குசன் தன் சொல்தேனில் நெஞ்சேதுவள்" என்றருளினர். இதில் 'சொல்தேன்' என்றதனல் ஆழ்வார் மதுபானம் பண்ணிச் செருக்குற்ருரென்று காட்டப்பட்டதாகிறது. .... .... (6)

(ஏழாவது உத்ஸவம்.) திருவாய்மொழித்தனியன்கள் ஒன்றில் *வான் திகழுஞ்சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல் ஆன்ற தமிழ் மறைகளாயிரமும்* என்று திருவாய்மொழியாயிரமும் அரங்கன் விஷயமென்று கூறியது அபிநிவேச வசத்திருலேயன்றி யதார்த்தமாக இருக்கமுடியுமோவென்று பலர் கேட்பதுண்டு. திருவாய்மொழியாயிரத்தில் *கங்குலும் பகலும்* என்கிற இப்பதிகம் ஒன்றுதவிர திருவரங்கத்திற்கு. வேறொரு துணுக்கையுங் காணவில்லை திருமலைக்கு மூன்றும் பத்திலும் ஆரும்பத்திலுமாக இரண்டு திருவாய்மொழிகள் தவிர அடிக்கடி துணுக்கைப் பாசுரங்களும் பலகாண்கின்றன. இங்ஙனேயிருக்க*வான்திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல் ஆன்றதமிழ்மறைகளாயிரமும்* என்ருல் இது எங்ஙனே பொருந்துமென்று சங்கிப்பது யுக்தமானதே. இதற்கு விஜ்ஞாபிக்கிறேன். ஆழ்ந்து நோக்கினல் ஆழ்வாருடைய திருவுள்ளத்தாலே திருவாய்மொழியாயிரமும் திருவரங்கம் பெரியகோயில் விஷயமானதேயென்று அறுதியிடமுடியும். எங்ஙனேயென்னில்; ஆசார்யஹ்ருதயத்தில் "ருக்கு ஸாமத்தாலே ஸரஸமாய் ஸ்தோபத்தாலே பரம்புமாபோலே சொல்லார்தொடையல் இசைகூட்ட அமர் சுவையாயிரமாயிற்று" என்றருளிச்செய்தபடி திருவிருத்தத்தில் ஒவ்வொருபாட்டும் திருவாய்மொழியில் ஒவ்வொருபதிகமாகப் பரம்பிற்றென்று உபபத்தியுடன் ஊர்ஜிதமாகிறது. இந்த *கங்குலும் பகலும் பதிகத்திற்குத் திருவிருத்தத்தில் எது (மூலமான) பாசுரமென்று பார்க்கில் *இறையோ விரக்கினும்* (63) என்கிற பாசுரமேயென்று பொருட்சேர்த்தியாலே பொருத்தமாக நிர்ணயிக்கலாகிறது. அப்பாசுரத்தின் ஈற்றடி *முறையோ அரவணைமேல் பள்ளிகொண்ட முகில் வண்ணனே!* என்பது. அதனல் ஸ்ரீரங்கநாதனுக்கு முகில்வண்ணனென்று திருநாமம் சாத்தினது ஸ்பஷ்டமாகிறது. அதை மனத்தில் திடமாகக்கொண்டு இங்கு *முகில்வண்ணனடிமேல் சொன்ன சொன்மாலையாயிரம்* என்றிருப்பதை உற்றுநோக்குமளவில் ஸ்ரீரங்கநாதன் திருவடிகளிலேதான் ஆயிரமும் அருளிச்செய்ததாக ஆழ்வார் திருவுள்ளத்தைக்கொண்டே நிஷ்கர்ஷிக்கக் குறையில்லை. திருமடலில் திருமங்கையாழ்வார் *ஆராமஞ்சூழ்ந்தவரங்கம்* என்றருளிச் செய்தவிடத்திற்கு—ஸ்ரீரங்கராஜதானிக்கு மற்ற திருப்பதிகளெல்லாம் ஆராம ஸ்தானீயங்கள் என்று மேலையார் பணிப்பதும் பொருத்தமானதே. ஆகவே திருவாய்மொழியில் இதர திவ்யதேசங்களை வருணித்திருப்பது கோயிலின் வளத்தை வருணித்திருப்பதாகவே கொள்ளக் குறையில்லை.

எட்டாவது உத்ஸவத்திலும் ஒன்பதாமுத்ஸவத்திலும் மாமுனிகளின் வைபவோபந்யாஸம் விரிவாக நிகழ்த்தப்பட்டது.

———

# மணவாளமாமுனிகளுத்ஸவம்—இயல்சாத்தன்று எம்பெருமானுரைப்பற்றி விஜ்ஞாபித்தவை.

## *அடியேனுள்ளானுடலுள்ளான்.*

பகவத் விஷயம் (ஈடு), ஸ்ரீ வசநபூஷண வியாக்கியானம், குருபரம்பராப்ரபாவம் முதலான க்ரந்தங்களிலே காண்பதோரிதிஹாஸத்தைச் சுருக்கமாகக் கேண்மின்; எம்பெருமானுர் உபயவேதாந்தப்ரவசநம் நடத்தியருளா நிற்க "ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தங்களும் சேஷத்வமும் நிரூபகமாகச் சொல்லப்படாநின்றதே, இவற்றினுள் அந்தரங்க நிரூபகம் எது?" என்கிற ப்ரஸ்தாவம் திருவோலக்கத்திலே நிகழ, ஸ்வாமி ஸர்வஜ்ஞராயெழுந்தருளியிருக்கச் செய்தேயும் இதனை ஆசார்யமுகேந வெளியிடுவிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே சென்று ஸேவித்து இதனையறிந்து வரும்படி ஆழ்வானை யனுப்பி யருள, ஆழ்வானும் திருக்கோட்டியூர்க்குச் சென்று நம்பி பக்கலிலே ஆறுமாஸம் காத்திருந்து *அடியேனுள்ளானுடலுள்ளான்* (8-8-2.) என்கிற திருவாய்மொழிப் பாசுரத் துணுக்கையைப் பெற்றுக்கொண்டு எம்பெருமானுரிடம் வந்து சேர்ந்து அதை விஜ்ஞாபிக்க, மஹாநிதியான இந்த ஸ்ரீ ஸூக்தியினுட்பொருளை ஸ்வாமி திருவோலக்கத்திலே விவரித்தார்.

அடியேனென்கிற சொல் நாலாயிர திவ்யப்ரபந்தத்தினுள் நூற்றுக்கணக்கானவிடங்களிலுண்டு; நம்மாழ்வார் பாசுரம்பேசத் தொடங்கும்போதே 'அடியேன் செய்யும் விண்ணப்பமே' என்று அடியேன் சொல்லையிட்டே பேசுகிருர். இப்படி பல நூறிடங்களில் அடியேன்சொல் இருக்கவும் அவற்றையெல்லாம்விட்டுத் திருவாய்மொழியில் ஒரு மூலையிலிருக்கும் பாசுரத் துணுக்கொன்றைத் திருக்கோட்டியூர் நம்பி எடுத்துக் கொடுத்தனுப்பியிருக்கிருர்; அது எட்டாம்பத்தின் எட்டாம் பதிகத்தின் இரண்டாம் பாட்டிலுள்ளது. அங்கேயே முதற்பாட்டின் முடிவிலும் 'ஒருவனடியேனுள்ளானே' என்று அடியேன் சொல்லுள்ளது; அதையும் விட்டு அடுத்த பாட்டினடியை யெடுத்துக் காட்டியுள்ளார். இதில் என்ன விசேஷமென்பது நுண்ணுணர்வினர்தம் நுண்மதிக்கே கோசரமாகக்கூடிய விஷயம். கேண்மின்; எந்த இடத்திலும் அடியேனென்கிற சொல்லுக்கு தேஹவிசிஷ்டனுன ஆத்மாவே பொருளாகும். *அடியேன் செய்யும் விண்ணப்பமே* என்னுமிடத்தை யெடுத்துக்கொள்வோம்; தேஹமின்றிக்கே வெறும் ஆத்மா விண்ணப்பம் செய்ய முடியாதன்றே. தேஹவிசிஷ்டனுன ஆத்மாவே விண்ணப்பஞ்செய்ய முடியுமாதலால் இங்கு வெறும் ஆத்மாவை அர்த்தமாகக் கொள்வதற்கில்லை; *அடியேன் சிறிய ஞானத்தன்* என்கிற மற்ருேரிடத்தையும் (1-5-7.) எடுத்துக் கொள்வோம்; இங்கு 'ஞானத்தன்' என்று ஞானமுடைமை சொல்லியிருப்பதனுல் அது தேஹத்திற்கு அஸம்பாவிதமாய் ஆத்மாவுக்கே ஸம்பாவிதமாகையாலே இங்கு அடியேனென்பது வெறும் ஆத்மாவையே சொல்லியாகவேண்டுமென்று சிலர் ப்ரமிக்கக்கூடும்; அப்படியில்லை; இங்கும் அடியேனென்கிற சொல் தேஹவிசிஷ்டனுன ஆத்மாவையே சொல்லுகிறது; ஏனென்னில், "காண்பானலற்றுவன்" என்கிற க்ரியையிலே அச்சொல் அந்வயிக்கவேண்டும்; வெறும் ஆத்மா அலற்றமுடியாதாகையாலே அங்கும் தேஹவிசிஷ்டனுன ஆத்மாவே அடியேன்சொல்லுக்கு அர்த்தமாகவேண்டியது அவசியமாயிற்று. இப்படி எந்தவிடத்திலும் தேஹவிசிஷ்டனுன ஆத்மாவையே அடியேன் பதம் சொல்லி நிற்குமென்பது திண்ணமாயிற்று. *ஒண் சங்கதை வாளாழியானொருவனடியே னுள்ளானே* என்கிறவிடத்திலும் அப்படியே.

இனி *அடியேனுள்ளானுடலுள்ளான்* என்கிறவிடத்தில்மட்டும் அடியேனென்பதற்கு வெறும் ஆத்மாவே அர்த்தமாகவேண்டிய நிர்ப்பந்தமுள்ளது. ஆத்மாவுக்கு விசேஷணபூதமான தேஹத்திற்கு வாசகமான சொல் உடலென்பது தனிப்பட இருப்பதனால் அடியேனில் தேஹத்தைச் சேர்த்து அர்த்தங்கொள்ளவேண்டிய அவச்யமில்லை; எம்பெருமான் ஜீவாத்மாவையும் உடல்பொருளையும் அநுப்ரவேசித்திருக்குமவன்' என்று சொல்லவேண்டுவது இங்கு விவக்ஷிதம். உடலிலுள்ளானென்பதனால் ஜடப்பொருளை அநுப்ரவேசித்திருக்குமவன் என்பது சொல்லிற்றாயிற்று. 'ஜீவாத்மாவை அநுப்ரவேசித்திருக்குமவன்' என்று விவக்ஷிதமான பொருளுக்கு *அடியேனுள்ளானென்று வாசகமிடப்பட்டிருக்கிறது. ஆத்மா அஹமர்த்தமாகையாலே என்னுள்ளானென்று சொல்லியிருக்கலாம்; அப்போதும் ஆத்மாவிலுள்ளானென்னும் பொருள் தேறிவிடும். ஆனால் ஆழ்வார் அப்படி யருளிச்செய்யாமல் *அடியேனுள்ளானென்றருளிச் செய்திருக்கையாலே, ஆத்மாவென்றும் அடியேனென்றும் பர்யாயம்—(அதாவது) ஆத்மாவுக்கு சேஷத்வமே அந்தரங்க நிரூபகம்—என்பது ஆழ்வார் திருவுள்ளமாக அறுதியிடலாகிறது.

இப்படி எம்பெருமானார் நிர்ணயித்ததாகச் சொல்லுமைதிஹ்யம் உண்மையாயிருக்கவேண்டுமாகில் இது அந்த ஸ்ரீ பாஷ்யகார• திவ்யஸூக்திகளில் எங்கேயாவது ஏறியிருக்கவேணும் இல்லையாகில் இந்த ஐதிஹ்யத்திற்கு கௌரவமில்லை. ஸ்ரீ பாஷ்யத்தில் *ஜ்ஞோத ஏவ* என்கிற ஸூத்ரத்தின் விவரணத்தில் இது தெரிவிக்கப்படவில்லை. அங்கு "அயமாத்மா ஜ்ஞாத்ருஸ்வரூப ஏவ" என்று இவ்வளவே முடிவாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே மேலே விவரித்த ஐதிஹ்யம் யதார்த்தமாயிருக்கத் தகுதியில்லையென்று குருகுலவாஸ பாக்யமில்லாதார் சிலர் சொல்லுவதுண்டு. அன்னவர்களை "எண்ணாத மானிடத்தை எண்ணாதபோதெல்லாமினியவாறே" என்கிற ரீதியில் விட்டிட்டு தத்வஜிஜ்ஞாஸுக்களான ஸுக்ருதிகளுக்குமட்டும் மருமமுணர்த்துகிறேனிங்கு. இந்த மஹார்த்தம் எம்பெருமானார் திருவுள்ளத்திலே நன்கு ஊறியிருந்து கீதாபாஷ்யத்தில் தகுந்த இடத்தில் வெளியிடப்பெற்றது. கீதையில் (7-16.) *சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந!, ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப!* என்றவிடத்தில் சங்கரபாஷ்யத்தை முன்னம் நோக்கிப் பிறகு ஸ்வாமி பாஷ்யத்தை நோக்குமின். "ஜ்ஞாநீ-விஷ்ணோஸ் தத்த்வவித்" என்றார் சங்கராசார்யர்; நம் ஸ்வாமி அப்பொருளை ஒன்றாக எண்ணாது "பகவச் சேஷதைகரஸ ஆத்ம ஸ்வரூபவித் ஜ்ஞாநீ" என்று அருளிச்செய்துளர். இப்படி ஓரிடமன்று. ஜ்ஞாநீ என வருமிடங்களிலெல்லாம் இங்ஙனே யருளிச்செய்கிறார். ஜீவாத்மாவின் ஜ்ஞானத்திற்கு ப்ரயோஜனம் தன்னுடைய சேஷத்வத்தை யறிவதுதான் என்று ஸ்வாமியின் திருவுள்ளம் தேறுகிறது. ஆழ்வார் ஸ்ரீ ஸூக்தியில் அவகாஹநமில்லாமல் இங்ஙனே யருளிச்செய்ய இயலாது.

### "பஜதாம் ப்ரீதிபூர்வகம் ததாமி."

ஸ்வாமியின் கீதாபாஷ்யத்தை ஆழ்ந்து அநுபவித்தால் அதிலுள்ள ஸ்ரீஸூக்திகள் பெரும்பாலும் திவ்யப்ரபந்தத்தை யுட்கொண்டே அருளிச்செய்தவையென்று நிச்சயிக்கலாம். ப்ரக்ருதம் விஸ்தரபயத்தினால் கீதாபாஷ்யத்திலிருந்து ஸாரதமமான ஓரிடமே யெடுத்துக்காட்டி நிற்கிறேன். கீதை (10...10.) "தேஷாம் ஸதத யுக்தாநாம் பஜதாம்

ப்ரீதி பூர்வகம், ததாமி புத்தியோகம் தம்'' என்றவிடத்தில் சங்கராசார்யர் 'ப்ரீதி பூர்வகம் பஜதாம்' என்று அந்வயக்ரமம் காட்டி ''ப்ரீதி:—ஸ்நேஹ:; தத்பூர்வகம் மாம் பஜதாம் இத்யர்த்த:'' என்று எழுதியுள்ளார். இந்த அர்த்தத்தில் என்ன குறை சொல்லமுடியும்? ஆனாலும் ஸ்வாமி ''ப்ரீதிபூர்வகம் ததாமி'' என்றே அந்வயம் காட்டியருளுகிறுர். சேதநன் செய்கிற பஜனத்தில் ப்ரீதிபூர்வகத்வத்தைக் கூட்டாமல் எம்பெருமான் செய்யுமருளிலே அதைக் கூட்டுகிறுர் ஸ்வாமி; இதற்கு உண்மையான காரணம் தெரியுமோ? திருவாய்மொழியில் (8-7-8.) *என்னையாளும் பிரானுர் வெறிதே யருள்செய்வர்—**உகந்து*** என்றுள்ளது. எம்பெருமான் தான் விஷயீகரிக்கத் திருவுள்ளமானவிடத்தில் அவ்யாஜமாகச் செய்யுமருளை **உகந்து** செய்வதாக ஆழ்வார் அருளிச்செய்கிறுர்; இப்படி யருளிச்செய்த ஆழ்வார்க்கு நிர்திஷ்டகீதா ச்லோகத்தில் ''ப்ரீதிபூர்வகம் ததாமி'' என்னுமந்வயமே திருவுள்ளத்திலுறைந்திருக்குமென்று ஸ்வாமி நிச்சயித்து அதற்கு அநுரூபமான பாஷ்யத்தை இட்டருளினுர். இவ்வண்ணமாக கீதாபாஷ்யத்தில் ஆழ்ந்து பார்த்தால் மஹாநிதிகள் மலை மலையாகக் கிடைக்கும்.

### *நிகரில்புகழாய் நிர்வாஹம்.*

சரணுகதிகத்யத்தில் *அகிலஹேயேத்யாதி (5) சூர்ணையில் ''மஹா விபூதே! ஸ்ரீமந் நாராயண! ஸ்ரீ வைகுண்டநாத!'' என்கிற ஸம்போதநங்களுக்குப் பிறகு ''அபார காருண்ய ஸௌசீல்ய வாத்ஸல்யௌதார் யைச்வர்ய ஸௌந்தர்ய மஹோததே!'' என்கிற ஸம்போதநத்தில் வாத்ஸல்யகுணமும் சேர்த்துப் படிக்கப்பட்டிருக்கச் செய்தேயும் மறுபடியும் (அவ்விடத்திலேயே) *ஆச்ரிதவாத்ஸல்யைக ஜலதே!* என்று மற்றெரு ஸம்போதநமும் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. கீழுள்ள ஸம்போதநத்திலேயே வாத்ஸல்யகுணமும் சேர்ந்திருக்கவும் மீண்டும் வாத்ஸல்யத்தை மாத்திரமிட்டுத் தனியே ஒரு ஸம்போதநமருளிச் செய்திருப்பது எதற்காகவென்று விமர்சிக்கவேணும். கீழ் ஸம்போதநத்தில் வாத்ஸல்யத்தை மற்றும் பல திருக்குணங்களோடே சேர்த்துப் படித்ததில் த்ருப்தியில்லாமல் வாத்ஸல்யத்தை மாத்திரம் தனிப்பட எடுத்துரைக்கவேணுமென்று திருவுள்ளமுண்டாகி இங்ஙனே யருளிச்செய்திருப்பதாக ஸ்பஷ்டமாய்த் தெரிகிறது. பெருவிடாய்ப்பட்டவன் நீரிலே விழுந்து நீரைப் பல முகமாக உபயோகங்கொள்ளுமாபோலே பகவத்குணகண கீர்த்தனத்திலே அத்விதீயமான உத்கண்டையையுடைய எம்பெருமானுர் அலமாப்பின் மிகுதியாலே யருளிச்செய்யுமதுக்கு நாம் ஒரு அடைவு தேடவேண்டாவாகிலும், இந்த புநருத்தி வாத்ஸல்ய குணத்திலேயானபடியாலே நம் ஆசார்யர்கள் இவ்விடத்தில் விசேஷாவதானம் செலுத்தி வெளியிட்டிருக்குமது இங்குத் தெரிவிக்கலாகிறது. வெகு நுட்பமான விஷயமிது.

திருவாய்மொழியில் (6-10-10.) *அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கை உறை மார்பா!* என்று ஆழ்வார் பெரிய பிராட்டியாரை முன்னிட்டுத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ப்ரபத்தி பண்ணுகிறபோது அடுத்த இரண்டாமடியில் எம்பெருமானை நிகரில் புகழாய்!* என்று ஸம்போதித்திருக்கிறுர். ஒப்பற்றவொரு திருக்குணத்தை உடையவனே யென்றபடி. அந்த திருக்குணம் எதுவாக இருக்குமென்று ஆராய்ந்தால் ப்ரகரணத்தை யநுஸரித்து வாத்ஸல்யமே அது—என்று எம்பெருமானுர் திருவுள்ளம்

பற்றுகிறுர். தோஷபூயிஷ்டனுன சேதநன் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாக வரிப்பது எதற்காகவென்னில்; தன்னுடைய தோஷங்களைக் கண்டு எம்பெருமான் தன்னை நிக்ரஹித்தருளாமைக்காகவன்றே; அப்பிராட்டியினுடைய புருஷகாரபலத்தாலே எம்பெருமானிடத்தில் முதன் முதலாக எந்த திருக்குணம் விகாஸமடைகின்றதென்னில்; வாத்ஸல்யகுணமே யென்பது நிர்விவாதம்.

வாத்ஸல்யமாவது தோஷாதர்சித்வமா? தோஷபோக்யத்வமா? என்கிற விசாரம் இவ்விடத்தில் சிறிதும் கொள்ளப்படவில்லை. எதுவாயினுமாகுக. தோஷாதர்சநமே வாத்ஸல்யமென்று கொள்வோம். அக்குணம் எம்பெருமானுக்கு உள்ளதேயானுலும் சேதநனுடைய அபராத பாஹுள்யத்தாலே அது உள்ளே அமுங்கிக்கிடந்ததென்றும், பிராட்டியின் புருஷகார பலத்தாலே அது தலையெடுக்கிறதென்றும் ஆசார்யர்கள் கண்டறிந்து கூறுகிறார்கள். இதை நிகமாந்தகுருவும் ரஹஸ்யத்ரயஸாரத்தில் த்வயாதிகாரத்திலும் மற்றும் சிறு ரஹஸ்யங்களிலும் ஸுஸ்பஷ்டமாக வெளியிட்டுள்ளார். *நிகரில்புகழாய்!* என்கிற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியில் விவக்ஷிதமான குணம் வாத்ஸல்யமே யென்பது பிள்ளைலோகாசார்யருடைய ரஹஸ்யங்களோடு தேசிக ரஹஸ்யங்களோடு வாசியற எல்லாவற்றிலும் விளக்கமாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஆக, இந்த வாத்ஸல்ய குணத்தை ஆழ்வார் நிகரற்றதாகத் திருவுள்ளம்பற்றினபடியாலே, ஸ்வாமி ராமானுஜர் இதை மற்ற திருக்குணங்களோடு சேர்த்துப்படித்த வளவால் த்ருப்திபெறுமல் தனிப் படவும் ஒரு சூர்ணிகை இதற்காக இட்டருளினர். இதனுல் ஆழ்வாரருளிச் செயலில் எம்பெருமானுர் வைத்திருந்த கௌரவாதிசயம் விசதமாகும்.

## *யத்பதாம்போருஹத்தனியன் விசேஷம்.*

ஆளவந்தார்க்குத் தனியனுக *யத்பதாம்போருஹேத்யாதி ச்லோகம் ஸ்வாமியருளிச் செய்தது ஸுப்ரசித்தம். இது கீதாபாஷ்யத்திலேயே சேர்ந்ததாதலால் ஸ்வாமி ஸூக்தி யென்பதில் விவாத லேசமுமில்லை. இந்த ச்லோகம் அமைந்திருக்குமழகை ஆராய்ந்தால் ஸ்வாமியின் உக்திஸரணி லோகவிலக்ஷணமானதென்பதை அல்ப ப்ரஜ்ஞர்களும் அறுதியிடக்கூடும். அந்த ச்லோகத்திற்குப் பெரியார்கள் பரம்பரையாக உபதேசித்துவரும் அர்த்த விசேஷங்களை ஆஸ்திகர்களுக்கு உபகரிக்கிறோம்.

''யத்பதாம்போருஹத்யாந வித்வஸ்தா சேஷகல்மஷ:,
வஸ்துதாமுபயாதோக்ஷம் யாமுநேயம் நமாமி தம்.''

இது ஆளவந்தாருடைய இரண்டு திருவடிகளை மாத்திரம் சிந்திப்பதாகச் சொல்லவந்ததன்று; *யத்பதாம்போருஹ பதத்தினுல் பதினுன்கு திருவடிகள் உத்தேசிக்கப்படுகின்றன. (யத்பதாம்போருஹ) என்கிற ஆறு எழுத்துக்களுக்கு வர்ணக்கிரமம் சொன்னுல் பதினுன்கெழுத்துக்கள் தேறும். யகார அகார, தகார, பகார அகார, தகார ஆகார, மகார, பகார ஓகார, ரேப, உகார, ஹகார அகார=என்ருயிற்று வர்ணக்ரமம் சொல்லும் வழி. இவ்வகையில் தேறுகிற பதினுன்கெழுத்துக்களும் பதினுன்கு திருவடிகளைத் தெரிவிக்கும். அவை என்னென்னில்: ஆளவந்தாருடைய இரண்டு திருவடிகள் தெரிந்தேயிருக்கின்றன. அவ்வாளவந்தார் தமக்குப் பரம நிதியாகக்கொண்ட [*ஸ்ரீமத் ததங்க்ரி யுகளம் ப்ரணமாமி மூர்த்நா* என்ற] நம்மாழ்வாருடைய இரண்டு திருவடிகள்; ஆக நான்கு. அவ்வாளவந்

தாருடைய திருவடிகளை ஆச்ரயித்திருந்து ஸ்வாமிக்கு ஆசார்யர்களான பஞ்சாசார்யர்களின் திருவடிகள் பத்து. ஆக இப்பதினுன்கு திருவடிகளைச் சிந்தித்து ஸத்தை பெற்றதாகத் தெரிவிப்பது இந்த ச்லோகம். இதனை விவரித்துக் காட்டுகேன் காண்மின்.

யஸ்ய பதாம்போருஹே—யத்பதாம்போருஹே: என்று ஸமாஸம். (ஸம்பந்த ஸாமாந்யே ஷஷ்டீ என்று அறிக.) ஆளவந்தாருடைய திருமேனியிலுள்ள பாதாரவிந்தங்களைச் சொன்னபடி. மறுபடியும் 'யஸ்ய பதாம்போருஹே, என்ருல்—ஆளவந்தார் தாம் *மாதா பிதா யுவதய:* என்கிற ச்லோகத்தில் "ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம் ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா* என்று தம்முடைய சென்னிக்கு அணியாகப் பரிக்ரஹித்த நம்மாழ்வாருடைய உபயபாதங்களும் யத்பதாம்போருஹ சப்தத்தினுலேயே எளிதாகத் தெரிவிக்கப்படும். இப்போது ஷஷ்டிக்கு அர்த்தம்—பரிக்ராஹ்ய பரிக்ராஹக பாவரூபமான ஸம்பந்தம். மீண்டும் "யஸ்ய பதாம்போருஹாணி யத்பதாம்போருஹாணி" என்று கொள்க. உலகில் சிஷ்யர்களைத் திருவடிகளென்றே ஸம்ப்ரதாயஜ்ஞர்கள் வழங்குவராதலால் ஆளவந்தாருடைய ஐந்து சிஷ்யர்களையே ஆளவந்தாருடைய திருவடிகளாகச் சொன்னபடி. 'பதாம்போருஹ' என்பதில் இரண்டு பதங்கள் உள்ளனவன்றே; (பத என்றும், அம்போருஹ என்றும்.) திருவடிக்கு வாசகமான பத சப்தத்தினுல் அவருடைய சிஷ்யர்களைச் சொல்லி, தாமரைக்கு வாசகமான அம்போருஹ சப்தத்தினுல் அவர்களுடைய திருவடிகளைச் சொல்லுகிறதென்றும் கொள்ளலாம். அம்போருஹமென்ருல் திருவடிகளைச் சொல்லுமோவென்னில்; *தாவி வையங்கொண்ட தடந்தாமரைகட்கே *மண்விண்முழுதுமளந்த வொண்டாமரை* என்கிற ஆழ்வார் பிரயோகங்களையறிந்தவர்கள் இதில் விப்ரதிபத்தி பண்ணமாட்டார்கள். "தாவி வையங்கொண்ட தடந்தாளிணை" என்ன வேண்டுமிடத்தில் திருவடிக்குப் பர்யாயமாகத் தாமரையையே சொல்லியிருப்பது காண்க. இந்த நடை வடமொழியிலுமுண்டு; அபஹ்நுதி யலங்காரமென்பர்கள். ரூபகாதிசயோக்தியுமாகும். "பச்ய நீலோத்பலத்வந்த்வாத் நிஸ்ஸரந்தி சிதாச்சரா:" இத்யாதிகள் காண்க.

ஆக, பரமாசார்யரான நம்மாழ்வாரையும் ப்ராசார்யரான ஆளவந்தாரையும் ஸ்வாசார்யர்களான ஐவரையும் ப்ரகாசப்படுத்தியே தனியனிட்டிருக்குமழகு ஸஹ்ருதய ஹ்ருதயங்கமம். "குரும் ப்ரகாசயேத் சிஷ்ய:" என்னுமல் "குரும் ப்ரகாசயேத் தீமாந்" என்று மூலப்ரமாணத்தில் இருக்கையாலே மஹா மேதாவிகள் எவ்விதமாக ஆசார்ய ப்ரகாசநம் பண்ணலாமோ அவ்விதமாகவே ஸ்வாமி தாமும் தம்முடைய மேதா வைபவம் விளங்க இங்ஙனே ச்லோகரத்நம் தொடுத்திருப்பது மிகவற்புதம். மஹான்களுடைய திருநாவின் வீறு இங்ஙனேயன்ருே இருப்பது. இப்படி நுட்பமாகத் தெரிந்துகொள்ள வேண்டும்படி எதுக்கு ச்லோகமியற்ற வேணும்? எல்லாரும் ஸுஸ்பஷ்டமாகவே நன்கு தெரிந்துகொள்ளும்படி யியற்றலாகாதோ வென்று கேட்பவர்கள் யாவஜ்ஜீவம் அப்படியே கேட்டுக்கொண்டிருக்கலாம்.

*யத்பதாம்போருஹேத்யாதியான மேற்குறித்த தனியனில் மற்றெரு விசேஷமும் நுட்பமாக உய்த்துணரத் தக்கதுண்டு; அதாவது—[பதாம்போருஹ] என்று ஐந்து எழுத்துக்களையிட்டு ஆளவந்தார் திருவடிகளை நிர்தேசித்திருப்பதானது ஆளவந்தாருடைய ஐந்து திருவடிகள் [அதாவது, ஐந்து சிஷ்யர்கள்] தம்முடைய சிந்தனைக்கு இலக்கானவர்

களென்றும் தெரிவிக்கப்பட்டதாகிறது. அது தன்னிலும் முதலிலே பகாரத்தையிட்டிருப்பதானது அந்த ஐந்து ஆசார்யர்களுள் தலைமையாசிரியரே தமக்குத் தலைவரான ஆசார்யராக வாய்த்தார் என்பதற்கு ஸூசகமாகிறது. எங்ஙனேயென்னில்; ஸ்வாமிக்குத் தலைமையாசிரியர் பெரியநம்பி; அவருடைய நிஜநாமதேயம் **பராங்குசதாஸர்** என்பது. வாக்ய குரு பரம்பரையில் "ஸ்ரீமதே ராமானுஜாயநம:, ஸ்ரீமத்யாமுந முநயே நம:" என்ற வாக்கியங்களுக்கிடையில் "**ஸ்ரீபராங்குச தாஸாய நம:**" என்றிருப்பது கொண்டும் பெரிய நம்பியினுடைய திருநாமம் **பராங்குசதாஸ**ரென்பதே யென்றறியலாம். **பதாம்போருஹ** என்றதில் முதலிலுள்ள பகாரம் பராங்குச தாஸராகிற தம் முதலாசிரியரை ப்ரத்யபிஜ்ஞாபநம் பண்ணவல்லது என்றுணர்க. இதற்குமேல் ஒன்று கேட்கக்கூடும்; முதலெழுத்தினால் பெரியநம்பி ஸூசிதராகிறப்போலே, மற்றை நான்கெழுத்துக்களினாலும் மற்ற நான்கு ஆசாரியர்கள் ஸூசிதர்களாகிறபடியையும் காட்ட வேண்டாவோ? என்று. கேண்மின்; தலைவரான ஆசிரியரைக் காட்டுமளவே போதுமானது. ஒவ்வோராசிரியரையும் இங்ஙனே காட்டியாகவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. மஹா விவேகிகளான சதுரர்கள் இன்னமும் உட்புகுந்து ஆராய்ந்து பார்த்தால் அந்த வழியும் புலப்படக்கூடும்.

ஆக இந்த உபபாதந ப்ரக்ரியையினால் எம்பெருமானார் அரியபெரிய விசேஷங்களை நுட்பமாகவே அருளிச்செய்யுமியல்வினர் என்பதை விவேகிகள் நிர்ணயிக்கக் குறையில்லை. திருமாலையாண்டான் திருவடிகளிலே ஸ்வாமி திருவாய்மொழிப்பொருள் கேளா நிற்கையில் "த்ரோணாசார்யர்க்கு ஏகலவ்யன் போலே ஆளவந்தார்க்கு நான்" என்றருளிச் செய்ததாக சரித்திர நூல்களிலே ப்ரஸித்தமாகவுள்ளது. இதை வேதாந்தவாசிரியர் அப்படியே ஸம்ஸ்க்ருதப்படுத்தி "த்ரோணாசார்யஸ்ய ஏகலவ்ய இவ யாமுநாசார்யஸ்ய அஹமித்ய பிப்ராயேண" என்று யத்பதாம்போருஹ ச்லோக வியாக்கியானத்தில் அருளிச் செய்கிறார். ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்யமே வடிவெடுத்தவரான ஆளவந்தாருடைய திருவடிகளைச் சிந்தித்துத் தாம் ஸத்தை பெற்றதாகச் சொல்லிக் கொள்ளுமெம்பெருமானார் ஆழ்வார் திருவடிகளிலும் அவருடைய திவ்ய ஸூக்திகளிலும் ஆளவந்தாரைவிட அதிசயிதமான ப்ராவண்யமுடையவரே யென்பது சிலாலிகிதம். ... ... ❋

## திருவெஃகாவில் பொய்கையாழ்வார் சாத்துமுறையன்று உபந்யாஸம்.

**பொய்கையாழ்வார் ஸ்ரீஸூக்திப் பெருமை யுபந்யாஸத்தில் ப்ராஸங்கிகமாக எம்பெருமானார் ஸ்ரீஸூக்திமஹிமாநுபவம்.**

ஸ்வாமி யெம்பெருமானார் ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்யும்போது ஆழ்வார்களின் திவ்ய ஸூக்திகளை இடைவீடின்றித் திருவுள்ளத்தில் சிந்தனை செய்துகொண்டேயிருந்தாரென்று முன்னோர்கள் மொழிந்திருப்பதுண்டு. அது உபயவேதாந்தங்களிலும் ஆழ்ந்த அறிவுபெற்ற மஹான்களுக்கே அறியவெளிது. இதற்குச் சான்றாக எடுத்துக் காட்டக்கூடிய விடங்கள் பலவுண்டு. ப்ரக்ருதம் அந்தரதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் உள்ளதான அரிய பெரிய விஷயமொன்று இங்கு நிரூபிக்கப்படுகிறது. அவ்விடத்தில் பரமபுருஷனுக்கு சரீர ஸம்பந்தம் கிடையாதென்று பூர்வபக்ஷவாதத்தில் ப்ரஸக்தமானதை ஸ்வாமி கண்டிக்குமிடத்து ஸ்ரீ ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்களில் சரீர பரிக்ரஹம்

பகவான் செய்தருளுகிறபடியை நிரூபித்துவருகையில் *பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்* என்கிற கீதா ஸூக்தியை யெடுத்துக்காட்டி, *ஸாதுபரித்ராணமேவ உத்தேச்யம்; ஆநுஷங்கிகஸ்து துஷ்க்ருதாம் விநாச:, ஸங்கல்பமாத்ரேணாபி தத்உபபத்தே:* என்றுள்ளது ஸ்ரீ பாஷ்ய ஸூக்தி. எம்பெருமான் அவதாரம் செய்தருள்வது ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதற்காகவும் துஷ்டர்களைத் தொலைப்பதற்காகவுமானாலும் ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதொன்றே உத்தேச்யம்: துஷ்டர்களைத் தொலைப்பதென்பது ஸங்கல்ப மாத்திரத்தினாலும் ஆகக்கூடியதாதலால் அது ஆநுஷங்கிகமேயொழிய ப்ரதானமன்று— என்பது மேலெடுத்துக்காட்டிய ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியின் கருத்து. துஷ்டர்களைத் தொலைப்பது ஸங்கல்ப ஸாத்யமாகிறாப்போலே ஸாதுபரித்ராணமும் ஸங்கல்ப ஸாத்யமாகக் கூடாதோ? "துஷ்டர்கள் நஷ்டர்களாகக் கடவர்கள்" என்று ஸங்கல்பிப்பதுபோல, "ஸாதுக்கள் ஸம்ரக்ஷணம் பெறக்கடவர்கள்" என்றும் பகவான் ஸங்கல்பிக்கமுடியு மன்றோ. அப்படியிருக்க, துஷ்டசிக்ஷணமே ஸங்கல்பத்தால் ஸாத்யமென்றும் சிஷ்ட பரிபாலனம் ஸங்கல்ப ஸாத்யமன்று என்றும் ஸ்ரீ பாஷ்யகாரர் எதுகொண்டு ஸாதிக்கிறாரென்று ஆராயுமளவில், நம்மாழ்வாருடைய ஸுஸ்பஷ்டமான ஸ்ரீ ஸூக்தியைக் கொண்டே ஸாதிக்கிறாரென்று நன்கு விளங்குகிறது. அதை விவரிக்கிறேன்.

திருவாய்மொழியில் (3—1—9) *மழுங்காத வைநுதிய சக்கரநல்வலத்தையாய், தொழுங்காதல்களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில். தொழும்பாயார்க்கு அளித்தால் உன் சுடர்ச்சோதி மறையாதே* என்கிற பாசுரம் பரமபோக்யமானது. எம்பெருமான் ஸ்ரீ கஜேந்திராழ்வானுடைய கூக்குரலைக் கேட்டு அரைகுலையத் தலைகுலைய மடுவின் கரையிலே ஓடிவந்து விழுந்தானென்கிற இதிஹாஸம் ப்ரஸித்தமானது. எதற்காக வோடிவரவேண்டும்? *கருதுமிடம் பொருதுவரவல்ல திருவாழியாழ்வானைத் திருநாட்டிலிருந்தே ஏவினால் அவன் ஒரு நொடியில் யானையின் இடரைத் தீர்த்துவரமாட்டானோ? அவனுக்குத்தான் ச்ரமம் கொடுக்க வேண்டுமோ? ஸகல ஜகத்ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் கருவியாயுள்ள ஸங்கல்பத்தினால் யானையினிடரை அவலீலையாகத் தீர்த்திருக்கலாமே. இவ்விரண்டுபடியுமின்றிக்கே அறப் பதறியோடிவந்தது எதற்காக? என்று நம்மாழ்வார் கேள்வி கேட்டுக்கொண்டு ஸமாதானத்தையும் தாமே யருளிச்செய்துள்ளார். *தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே* என்கிற இரண்டாமடிதான் ஸமாதானம். கஜேந்திராழ்வான் தன்னெதிரே வந்து நின்ற பகவானை நோக்கி, *நாஹம் களேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந, கரஸ்த கமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் தவ* என்றான். [என்றேனுமொருநாள் அழிந்தேபோகக்கூடியதான இவ்வுடலுக்காக நான் கரையவில்லை; எம்பெருமானே! உன்னை ஸேவித்து உன் பொற்றாமரையடிகளில் இத்தாமரை மலர்களைப் பணிமாறுவதற்காகவே கரைந்தேன் என்றான்.] இப்படிப்பட்ட ஆவல்கொண்ட பக்த சிகாமணிகளின் ஆசையை ஸங்கல்பத்தினால் தலைக்கட்ட முடியாதென்பதையும் அப்பாசுரத்தின் பின்னடிகளில் ஆழ்வார் தாமே விவரித்துக் கூறியுள்ளார். நேரில் அவதரித்துத் திருமேனியைக் காட்டியே அன்பர்களைக் காக்கவேண்டும்—என்று ஆழ்வாரருளிச்செய்த அர்த்தத்தையே ஸ்வாமி உயிராகக்கொண்டு அந்தரதிகரண ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியைப் பணித்தாராயிற்று. ... ... ❋

**அடியேன்செய்யும் விண்ணப்பம்.** இப்படியொரு விசேஷ மலர் வெளியிடவேணு மென்னுமவா நிகழும் பங்குனித்திங்களின் முன்னுளில்தான் தோன்றியது. 25—3—67 தேதியன்று எழுதிமுடித்த ஸமஸமயத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸ. திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமி அடியேனை அநுக்ரஹித்தருள்வ தற்காகவே பரமகிருபையுடன் இவ்விடம் எழுந்தருளி ஸேவை ஸாதித்தருளி *பொலிக பொலிக பாசுரத்தைப் பரமாத்புதமாக உபந்ய ஸித்தருளினுர். அடியேன் அப்போது "முன்னமே துயின்றருளியமுதுபயோததியோ, பன்னகாதிபப் பாயலோ பச்சையாலிலையோ, சொன்ன நால்வகைச் சுருதியோ கருதி நீயெய்தற்கு, என்னமாதவஞ் செய்ததிச் சிறு குடிலென்ருன்" (வில்லிபாரதம்) என்கிற விதுரர் பாசுரத்தை விவரித்து விஜ்ஞாபனம் செய்து இம்மலரை ஸ்ரீ ஸ்வாமி திருவடி களுக்கு ஸமர்ப்பணம் செய்து ஸத்தை பெற்றேன். *தெழிகுரலருவித் திருவேங்கடத் தெழில்கொள் சோதியெந்தை தந்தை தந்தைக்கு ஒழிவில் காலமெல்லாமுடனுய்மன்னி வழுவிலகவடிமை செய்யுமிந்த மஹா ஸ்வாமி அடியேன்திறத்து அல்லும்பகலும் அந்தரங்கமாகச் செய்தருளும் மங்களாசாஸனத் திற்கு அடியேன் மங்களாசாஸனம் செய்து நிற்கிறேன். ... ... ✽



ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமி.

---

## அன்பர்களுக்கு அறிவிப்பு.

இந்த விசேஷ மலரில் நிகழும் பராபவ வருஷத்து உபந்யாஸங்களையெல்லாம் ஒருவாறு வெளியிட்டு முடித்துவிடவேணுமென்று எண்ணியிருந்தேன். பாதிபாகமே யாயிற்றில்லை. புரட்டாசி, ஆவணி, ஆடி, ஆனி, வைகாசி, சித்திரை ஆக ஆறு மாதங் களில் நடந்த உபந்யாஸங்களையும் எழுதிப் பூர்த்திசெய்ய ஆவலிருந்தது. இந்த ஸந்தர்ப்பத்தில் அவகாசப்படாமையினுல் அவை அடுத்த மாதமே இரண்டாம் மலராக வெளியிடப்படும். ஸ்ரீ பாஷ்யாதிகரணமெழுபத்தாறு என்கிற ஸ்ரீ பாஷ்யஸார ஸர்வஸ்வம் நாளை ப்லவங்க வருஷத்து எம்பெருமானுருத்ஸவ நினைவு மலராக வெளிவரும்.

—பத்ராதிபர். 27-3-67

Rgd. No. 2975 **ஸ்ரீராமாநுஜன்**

---

மிக முக்கியமான அறிவிப்பு:—நமது ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் மூலமாக ஸம்பிரதாய நூல்கள் பலவும் அச்சிடப்பட்டு வருகின்றனவென்பது உலகம் பரவியுள்ளது. ஆஸ்திகர்கள் பலரும் இச்சபையில் மெம்பராகச் சேரும்படி கோரப்படுகிறார்கள். இதற்குச் செலுத்தவேண்டிய வருடச்சந்தா ரூ. 25 மட்டுமே. 213 நெ. கோவிந்தப்பநாய்க்கன் தெரு, [illegible]. டி. மதராஸ் - இந்த விலாஸத்தில் விவரங்கள் தெரிந்துகொள்க. ... .... ( )

நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) A. RAMANUJACHARI, B. A.,
A 230 E. Type, Pandara Road, New Delhi.-11.

(4) S. R. SRINIVASAYYANGAR,
11/5, ஐஸ்ஹௌஸ் ரோட், திருவல்லிக்கேணி.

---

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**

L. KANCHEEPURAM.

---

28 ri K.P.Chandradasan,
8, Azad Ro d,
ERODE

---

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kanchipuram.